# கல்கி

KALKI 24.9.89 ரூ. 2.50



## மு.க.ஸ்டாலின்:
## செல்வாக்கு செயல்படுகிறதா?


குளியலுக்குப் பின்
சொகுசான முடிவு.



கல்யாணக் காப்பி
கதை: மதன்கோபால்
படம்: செல்வம்
மீனாவைப் பெண்பார்க்கும் படலம்
கணேசா! பொண்ணை இப்பவே நல்லா பார்த்துக்கோ...
நான் முடிவு பண்ணியாச்சு. ஓகேதான்!




காப்பி கொண்டு வந்த மீனாவின் கரம் பயத்தில் நடுங்க.....
ஸாரி... வெரி ஸாரி...
நோ ப்ராப்ளம்




அவசரமாக இருவருமே உருண்ட டம்ளரை எடுக்க முற்பட...
ஸாரி.... ஸாரி அகெய்ன்
ஓ! இட்ஸ் ஓகே!




கணேசனின் தாயார்....
பொண்ணுக்கு ஒரு காப்பி கூடச் சரியா கொடுக்கத் தெரியலையே... நாங்க வர்றோம்.




கணேசன் சற்று பின்தங்கி மீனாவின் அப்பாவிடம்.....
கவலைப் படாதீங்க... அம்மாகிட்ட நான் பேசிக்கிறேன்....


திருமணம் முடிந்து.... முதலிரவு
நான் உங்கமேலே காப்பி கொட்டியும் என்னைக் கல்யாணம் பண்ணிக்க சம்மதிச் சீங்களே...
அதிலே ஒரு கதை இருக்கு....


இருபது வருஷங்களுக்கு முன்...
கணேசா! மாமாவுக்குக் காப்பி வாங்கிட்டு வா....


தகப்பனாரின் கட்டளையை நிறைவேற்றிய கணேசன்... கை தவறி...
ஸாரி மாமா... ஸாரி மாமா...


மடையா! ஒரு காப்பி ஒழுங்கா கொண்டு வந்து தரத் துப்பில்லை...


அன்று மூன்றாம் மனுஷன் முன் அடி வாங்கியதை என்னால் மறக்கவே முடியலை... அதனால் உன் உணர்ச்சிகளை என்னால் புரிஞ்சுக்க முடிஞ்சது...


...அது போகட்டும்... உன் நெற்றியிலே என் தலை இடிச்சுதே... வீங்கி யிருக்கா பார்க்கறேன்....

* முதிர்ந்த வயதிலும் இசை அன்பர்களின் கோரிக்கையை ஏற்று, இசை நுணுக்கங்களை உணர்த்தக் கச்சேரி செய்கிறார்.



பாபநாசம் சிவன் நூற்றாண்டு:

# புனலருவியாகப் பொழிந்த பாடல்கள்!

**நீ**ங்கள் நடனக் கலை ரசிகரா? பல நாட்டிய நாடகங்களுக்கு இசையமைத்தது டன் பரத நாட்டியக் கலைஞர்களுக்குப் பல பதவர்ணங்களை இயற்றி அளித்தவர் — பாபநாசம் சிவன்.

நீங்கள் கர்நாடக சங்கீத ரசிகரா? 'தேவி நீயே துணை', 'காணக் கண் கோடி வேண்டும்' போன்ற பிரபலமான பாடல்களை ஏராளமாக இயற்றி, தமிழிசைத் தொண்டு புரிந்தவர் சிவன்.

நீங்கள் சினிமா இசைப் பிரியரா? 'மன்மத லீலையை வென்றார் உண்டோ?' போன்ற இன்றைக்கும் நினைவிலிருந்து 'ஹம்' பண்ணப்படுகிற பாடல்களை இயற்றியவர் சிவன்.

இவை எதிலுமே நாட்டம் இல்லை — 'சும்மா ஏதாவது 'வம்பு' இருந்தால் சொல்லு!' என்று கேட்கும் ரகமா நீங்கள், அப்படியானால், "தெரியுமோ உங்களுக்கு? ஜானகி எம்.ஜி.ஆரின் சொந்த சித்தப்பா வாக்கும், **பாபநாசம் சிவன்!**"

**இவை எல்லாவற்றுக்கும் மேல் அவர் ஓர் அற்புதமான மனிதர். அவரைப் பற்றிய நினைவுகளை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார் அவருடைய இளைய மகள் ருக்மிணி ரமணி:**

**மி**கவும் மௌனமையான மனிதர் எங்கள் அப்பா. வீடு தேடி யார் வந்தாலும்—



* மயிலை மாடவீதிகளில் பஜனை.



"என்னங்க! வீட்டை விட்டு ஓடிப் போன நம்ம பையன் எழுதி வெச்சுட்டுப் போன லெட்டரில் கடைசியில் 163 சென்டிமீட்டர்னு எழுதியிருக்கானே, ஏன்?"

"அது அவனுடைய உயரமாய் இருக்கும்டி. டி.வி.யில் 'காணவில்லை' விளம்பரம் கொடுக்கத் தேவைப்படுமேன்னு எழுதியிருப்பான்!"

— ஞா. ஞானமுத்து.

---

சின்னக் குழந்தைகளாயிருந்தால் கூட, வாய் நிறைய 'வாங்கோ' என்றுதான் அழைப்பார். வெளி மனிதர்களிடம் அவர் ஒருமையில் பேசிக் கேட்ட ஞாபகமே எனக்கு இல்லை.

மியூசிக் அகாடமியில் அவர் 'தலைமை தாங்கிய வருஷம் 'என் சார்பாகத் தலைமை உரையை என் 'குழந்தை' ருக்மிணி படிப்பாள்' என்று அறிவித்து விட்டார். எனக்கு ஒரே சங்கடமாகப் போய் விட்டது. நிகழ்ச்சி முடிந்ததும் 'என்னப்பா என்னைப் போய்க் 'குழந்தை'ன்னு சொல்லிட்டேளே?' என்றேன். 'நீ எப்போதும் எனக்குக் குழந்தை தானே!' என்று சொல்லி விட்டார்.

இத்தனை வாஞ்சையுடன் இருந்ததால் தானோ என்னமோ 'தியாக பூமி' படத்தில் அவ்வளவு தத்ரூபமாக அவரால் நடிக்க முடிந்தது. அதில் அவர் ஜாதி உணர்வுகளற்றவராகவும் விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்று நாடெங்கும் பாதயாத்திரை செய்பவராகவும் நடித்தார். நிஜ வாழ்க்கையிலும் ஜாதி பேதம் பாராமல் வீட்டிற்கு யார் வந்தாலும் சகோதரப் பாசத்துடன் உபசரித்து வரவேற்றார்; தமிழ்நாடு முழுவதிலும் ஊர் ஊராகப் பாதயாத்திரை சென்று அந்தந்த ஸ்தல தெய்வங்களைப் பாடினார்.

**அ**வர் பாடல் இயற்றுவதைப் பார்ப்பதே ஓர் அரிய அனுபவமாக இருக்கும். பலமுறை பாடிப் பாடி மெருகேற்றிய மாதிரி கச்சிதமாக சாகித்தியமும் ராகமும் தாளமும் இழைந்து புனலருவி மாதிரி வெளிப்படும். ஒரு நாள் அவர் நவரஸ கானடா ராகத்தில் 'நின்னுவினா' என்ற பாட்டைப் பாடியதை வெகுவாக ரசித்த ராமநாதபுரம் கிருஷ்ணன், மறுநாள் அவரிடம் மீண்டும் நவரஸ கானடா பாடச் சொல்லிக் கேட்டார். அப்போதுதான் அப்பா, 'இந்த நவரஸ கானடாவைக் கேளு' என்று சொல்லி விட்டு, 'நானொரு விளையாட்டு பொம்மையா? ஜகன்நாயகியே உமையே உந்தனுக்கு' என்ற கீர்த்தனையை அந்தக் கணமே இயற்றிப் பாடினார்.

**சி**வராத்திரி இரவுகளில் மயிலை மாட வீதிகளில் அப்பாவின் பஜனை பிரசித்தி பெற்றது. நடுத்தெரு என்றும் பாராமல் வித்வான்கள் காலில் விழுந்து வணங்குவார்கள்!

பாபநாசத்தில் எங்கள் பெரியப்பா தமிழாசிரியராக இருந்தார். ஒருமுறை அப்பா அங்கு சென்ற போது பட்டை பட்டையாக விபூதி தரித்துப் பஜனை செய்தபடி இருந்ததைக் கண்ட அவ்வூர் மக்கள் 'ஆஹா! சிவனே நமது ஊருக்கு வந்து விட்டது போல் அல்லவா இருக்கிறது!' என்று மெய்மறந்து மகிழ்ந்தனர். அதனால் தான் அவருக்குப் பாபநாசம் சிவன் என்ற பெயரே வந்தது. அவரது இயற்பெயர் ராமையயா — சொந்த ஊர் போலகம்!

**பே**னாவுடன் பிறந்தது போல எதையேனும் எழுதிக் கொண்டேதான் இருப்பார் அப்பா. சும்மாயிருக்கும் நேரத்தில் பழமொழிகளாக எழுதுவார்; ஒன்றுமில்லையெனில் இரு பெரிய ஊர்களுக்கிடையே ரயில் பாதையில் வரும் ஸ்டேஷன்களின் பெயர்களையெல்லாம் வரிசையாக எழுதுவார்!

மனத்தில் பாட்டு தோன்றி விட்டால் கையில் கிடைக்கும் காகிதத்தில் எழுதி விடுவார். காலெண்டர் காகிதத்தின் பின்னால் கூட அவர் எழுதியதுண்டு. இவ்வளவு சாகித்யங்களை இயற்றியிருந்தாலும் ஒரு கச்சேரியில் கூட யாரேனும் வற்புறுத்திக் கேட்டாலொழிய தாமே தமது பாட்டைப் பாட மாட்டார். அந்தத் தன்னடக்கம்தான் அவரது மிகப் பெரிய சொத்தாக இறுதி வரை திகழ்ந்தது.

**(ருக்மிணி ரமணி, சென்னை கர்நாடக இசைக் கல்லூரியில் பேராசிரியையாகப் பணியாற்றுகிறார். சிவன் அவர்களைப் பற்றி ஒரு சிறிய வரலாற்று நூல் எழுதியுள்ளதோடு சிவனின் பாடல்களையெல்லாம் தொகுத்து, சுவரப்படுத்திப் புத்தகங்களாக வெளியிடச் செய்துள்ளார்.)**

சந்திப்பு: **சீதா ரவி**

உங்கள் குடும்ப ஆரோக்கியத்திற்கான டின்

1கிலோ சாக்கலேட் காம்ப்ளான்



Complan®

COMPLETE PLANNED FOOD

CHOCOLATE FLAVOUR

இலவசம்!




FREE!

Collect a ceramic mug with this pack.




இரண்டு 500 கிராம் டின்களுக்குப் பதில், வாங்குங்கள் 1 கிலோ சாக்கலேட் காம்ப்ளான் டின், மிச்சமாக்கிடுங்கள் 4 ரூபாய்.

அத்துடன் ஒரு பீங்கான் குவளை இலவசம். உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் தேவைப்படும் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும், காம்ப்ளான்.

வாங்குங்கள் இன்றே.

23

மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

காம்ப்ளான்®

GX/58/213 TML

# “வீரப்பன் எனக்கு விளம்பர

**கோபாலபுரத்தில் கலைஞர் வீடு. கலைஞர் வீட்டில் இல்லாததால் பரபரப்போ, ஜன நெருக்கடியோ இல்லை. காலை சுமார் பதினோரு மணி. உள் ஹாலில் நடுநாயகமாய் ஒரு சோஃபா. ''இது தலைவர் அமருகிற சோஃபா,'' என்று கூறியபடி பக்கத்திலிருந்த ஒன்றில் அமருகிறார் ஸ்டாலின். லேசாக இருமுகிறார். ''உடம்பு சரியில்லையா?'' என்று கேட்டதற்கு, ''எனக்கு எப்பவுமே இருமல் உண்டு,'' என்று கூறிப் பேட்டிக்குத் தயாராகிறார். பேட்டி நெடுக இடையிடையே இருமல்...:**

கல்கி: ஓர் அரசியல்வாதியின் மகன் என்பதுதான் நீங்கள் அரசியலில் நுழைய அடிப்படைக் காரணமா?

மு. க. ஸ்டாலின்: தலைவருக்கு (கலைஞர்) ஐந்து மகன்கள் இருக்கிறோம். ஆனால் நான் ஒருவன் மட்டும்தானே அரசியலில் இருக்கிறேன். எனக்குப் பள்ளிக்கூட நாட்களிலிருந்தே பொதுப் பணிகளில் ஈடுபாடு உண்டு. கோபாலபுரத்தில், என் வயதுப் பையன்களைச் சேர்த்துக் கொண்டு நாடகங்கள் போட்டிருக்கிறேன்; நிறைய பொதுக் காரியங்கள் செய்திருக்கிறேன். அரசியலில் அடிமட்டத்திலிருந்துதான் வளர்ந்திருக்கிறேன். முதலில் தி. மு. க. வில் வட்டணா உறுப்பினராய்ச் சேர்ந்து, வட்டப் பிரதிநிதியாய் இருந்து, பகுதிப் பிரதிநிதியாய் ஆகி, அதன் பிறகு மாவட்டப் பிரதிநிதியாகி, அதற்குப் பிறகு பொதுக் குழு உறுப்பினர் ஆனேன். இதில் எதுவுமே நியமனப் பதவியில்லை. ஓட்டுப் போட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். இப்போது இளைஞர் அணி செயலாளராய் இருக்கிறேன்.



• ''என்னை நானே உருவாக்கிக் கொண்டேனே தவிர......



• ...என்னை யாரும்···

என்னை நானே உருவாக்கிக் கொண்டேனே தவிர என்னை யாரும் உருவாக்கவும் இல்லை; கட்சிக்குள் திணிக்கவும் இல்லை.

கல்கி: தி. மு. க. வில் இளைஞர் அணியின் ஆதிக்கம் அதிகமாய் இருப்பதாய்ப் பரவலாகச் சுட்டிக்காட்டப்படுகிறதே!

ஸ்டாலின்: 67ல் தேர்தலின் போது, எழுச்சியுடன் பணியாற்றி, மக்களிடையே கழகத்தை நெருக்கமாக்கி, வெற்றி பெற உதவியவர்கள் அப்போது கட்சியிலிருந்த இளைய தலைமுறையினர்தான். ஆனால் எம்.ஜி.ஆர். ஆட்சியின் போது தி. மு. க. இளைஞர் அணியை, எம்.ஜி.ஆர். மன்றங்களுக்குப் போட்டி அமைப்புக்களாக அவர் கருதியதால், இளைஞர் அணியும் அமைதி

# தருகிறார்!"

— மு. க. ஸ்டாலின் பேட்டி

யாகச் செயல்பட வேண்டியதாக இருந்தது. ஆனாலும், மீண்டும் இளைஞர் அணி சுறுசுறுப்புடன் செயல்பட ஆரம்பித்தது. மகளிர் அணி, தொழிலாளர் அணி, இலக்கிய அணி என்று பல இருந்தாலும், இளைஞர் அணி புதிய உத்வேகத்துடன் செயல்பட்டது; மீண்டும் தி. மு. க. ஆட்சியைப் பிடித்ததற்கு, இளைஞர் அணியின் உழைப்பு ஒரு முக்கிய காரணம். இதைக் கட்சித் தலைமையும் ஒப்புக் கொள்கிறது.

கல்கி: இந்தச் சுறுசுறுப்புக்கு, நீங்கள் தலைமை ஏற்றதுதான் காரணம் என்பீர்களா?

ஸ்டாலின்: இளைஞர் அணி, முக்கியத்துவம் பெற்ற போது, பலரும் அதன் தலைமைப் பொறுப்புக்கு என்னைப் போட வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டனர். தலைவருக்கும் அதைத் தெரிவித்தனர். ஆனால் தலைவர் அதை ஏற்கவில்லை. ஆனால் கட்சியின் பெரும்பான்மையான முன்னணித் தலைவர்களின் கருத்துப்படி இளைஞர் அணித் தலைமை எனக்கு அளிக்கப்பட்டது.

அறிக்கை விடுகிறார்கள்; முடிவெடுக்கிறார்கள்; ஆனால் இளைஞர் அணிச் செயலாளரான நான் அப்படிச் செயல்பட முடியவில்லை. அப்படிச் செயல்பட்டால், தலைவரின் மகன் என்பதால் மற்றவர்களை மதிப்பதில்லை என்று குற்றச்சாட்டுகள் வந்து விடுமோ என அஞ்ச வேண்டியுள்ளது. அதனால்தான் எதுவானாலும் பொதுச் செயலாளரைக் கலந்தாலோசித்து, அவரது அறிவுரைப்படி செயல்படுகிறேன்.

கல்கி: ஆனாலும் அமைச்சரவையிலுள்ள இளைய தலைமுறையினர் உங்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டுதான் செயல்படுகிறார்கள் என்று சொல்லப்படுகிறதே?

ஸ்டாலின்: அது உண்மையில்லை. எல்லா எம்.எல்.ஏ.க்களுக்கும் எந்த அளவு முக்கியத்துவம் தரப்படுகிறதோ, அந்த அளவு முக்கியத்துவம்தான் எனக்கும் தரப்படுகிறது. அமைச்சர்களுக்கும், அரசு அதிகாரிகளுக்கும் நான் வீட்டிலிருந்து கொண்டு உத்தரவு போடுவதில்லை.

கல்கி: அப்படி நீங்கள் சொன்னால் கூட, மற்றவர்களை விட ஸ்டாலினின் கடிதத்துக்கும், வார்த்தைக்கும் மதிப்பு அதிகம் என்று மக்களும் நம்புகிறார்கள்; முன்னுரிமை தர வேண்டும் என்று அதிகாரிகளும் நினைக்கிறார்களே?

... உருவாக்கவுமில்லை; ...



" ...கட்சிக்குள் திணிக்கவுமில்லை."



கல்கி: அப்படியெனில், கலைஞரின் மகன் என்பது உங்களுக்கு அனுகூலமான விஷயமில்லை என்கிறீர்களா?

ஸ்டாலின்: தலைவரின் பக்கத்திலிருந்து, அவரை நோக்குகிற, அவரது அனுபவங்களை, பேச்சுத் திறமையைக் கண்டு, கேட்டுப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு கிடைத்துள்ளது என்பதுதான் அனுகூலம். ஆனாலும் கூட அவரது மகன் என்பதனால் எனக்குச் சங்கடங்கள்தான் அதிகம். ஆமாம்! என்னுடைய தனித் தன்மையை வெளிப்படுத்த முடியாமல் போகிற சந்தர்ப்பங்கள்தான் அதிகம். தி.மு.க.வின் அங்கங்களான மகளிர் அணி, மாணவர் அணி, செயலாளர்கள் எல்லாம் தன்னிச்சையாய்

ஸ்டாலின்: அதுவும் உண்மையில்லை. ஒரு எம்.எல்.ஏ. என்கிற முறையில் எனது தொகுதி சம்பந்தப்பட்டவை தவிர, மற்ற விஷயங்களில் நான் தலையிடுவதே கிடையாது. நான் எடுத்துச் சொல்லும் விஷயங்களைச் சட்டத்துக்குட்பட்ட வகையில் அதிகாரிகள் செய்து தருகிறார்கள். எத்தனையோ விஷயங்களில் 'சாத்தியமில்லை', முடியாது என்றும் சொல்லியிருக்கிறார்கள்... நான் ஒரு தபால்காரர் போலத்தான். மக்களிடமிருந்து மனுக்களை வாங்கிக் கொண்டு, சம்பந்தப்பட்டவர்களின் பார்வைக்குக் கொண்டு போகிறேன். தேவையெனில் நானே கோட்டைக்கும், அரசு அலுவலகங்களுக்கும் போகிறேன்; அதிகாரி

"அந்தப் போலீஸ்காரர்கிட்டே என்ன தகராறு?"

"அவருக்குத் தரவேண்டிய மாமூல் பாக்கிக்கு வட்டி கேட்கிறார்!"

— ஞா. ஞானமுத்து.

களுடன் பேசுகிறேன். தெரு விளக்கு, சாக்கடை அடைப்பு, தண்ணீர் பிரச்னை போன்றவை சுலபமாய்த் தீர்க்கப்படுகின்றன. குடிசை மாற்று வாரியக் குடியிருப்புகள் போன்ற பெரிய பிரச்னைகளை நிதி நிலைமை காரணமாய்த் தீர்க்க முடிவதில்லை. சுமார் 50 சதவிதம் பிரச்னைகளை வெற்றிகரமாய் என்னால் தீர்க்க முடிகிறது... இன்று கூட என் தொகுதியில் குடிசைவாசிகள் குடியிருப்பு சம்பந்தமாக அதிகாரிகளுடன் பேசுவதற்காக உங்கள் பேட்டி முடிந்ததும் நான் போக வேண்டும். உங்கள் குற்றச்சாட்டு உண்மையானால், நான் அதிகாரிகளைச் சந்திக்கப் போகாமல், அவர்களை என் வீட்டுக்குத்தானே வரச் சொல்லியிருக்க வேண்டும்.

கல்கி: சமீபத்தில் 'சாவி'யில் உங்களைப் பற்றிய கட்டுரையில் மின்வாரிய அதிகாரிகள், உங்கள் வீட்டுக்கு வந்து, தாம் எடுத்த நடவடிக்கைகளைப் பற்றிச் சொல்லி விட்டுப் போனதாகக் குறிப்பிட்டிருந்தார்களே!

ஸ்டாலின்: அதெல்லாம் இல்லை!

கல்கி: பொது மக்களையும், அதிகாரிகளையும் சந்திக்க வைக்கிற நிகழ்ச்சிகளை அதிகார துஷ்பிரயோகம் என அ.தி.மு.க.வினர் கூறுகிறார்களே!

ஸ்டாலின்: பிரச்னைகளுக்குத் தாமதமின்றித் தீர்வு காண இத்தகைய நிகழ்ச்சிகள் உதவுகின்றன. இதைப் பார்த்து விட்டு, சென்னை நகரின் இன்னும் சில எம். எல். ஏ.க்களும் கூட இது போல் செய்ய முன் வந்திருக்கிறார்கள். அத்தகைய சந்திப்புகளைத் தொகுதி மக்கள் மிகவும் வரவேற்கிறார்கள். என்னைப் பாராட்டுகிறார்கள்.



தேர்தலில் வெற்றி பெற்ற போது அடைந்ததை விட இந்தப் பாராட்டுக்களால் நான் அதிக மகிழ்ச்சி அடைகிறேன். எனக்கு வசதியான நேரத்தில், அதிகாரிகளை வரச் சொல்லாமல், அதிகாரிகளுக்கு வசதியான நேரத்தில்தான் அவை நடத்தப்படுகின்றன. சில சமயங்களில், சில உயர் அதிகாரிகள், வேறு முக்கியமான பணி காரணமாய், நான் ஏற்பாடு செய்யும் நிகழ்ச்சிக்கு வர முடியாது போய் விடுவதுண்டு. பின்னர் அந்த அதிகாரிகளைச் சந்தித்து, பிரச்னைகளைத் தெரிவிக்கிறேன். இதிலே அதிகார துஷ்பிரயோகம் என்ன இருக்கிறது. அ. தி. மு. க.வினர் இதற்கு அவசியமின்றி ஒரு 'மோடிவ்' கற்பிக்கிறார்கள். முதலமைச்சர் மகன் என நான் நினைத்திருந்தால் நான் எப்படியெல்லாமோ செயல்படலாம். ஆனால் நான் ஒரு எம்.எல்.ஏ. என்கிற முறையில் மட்டுமே செயல்படுகிறேன். நான் அதிகாரத்தைப் பயன்படுத்துகிறேன் என்று ஒரு வாதத்துக்காக ஒப்புக் கொண்டாலும், அதை நான் மக்கள் நலனுக்குத்தானே பயன்படுத்துகிறேன். இதிலென்ன தவறு? அதிகாரத்தைப் பயன்படுத்தி நான் கோவிலில் கொள்ளையடித்தேனா? கோவில் உண்டியலை உடைத்தேனா? சுப்பிரமணியப் பிள்ளை கொலையை மூடி மறைத்தேனா? வீரப்பன், எனக்கு நாடு தழுவிய அளவில் நல்ல விளம்பரம் தருகிறார். அவ்வளவுதான்.

கல்கி: ஹோட்டல் உரிமையாளர்கள் மாநாட்டில், அமைச்சர் நாஞ்சில் மனோகரனிடம் விற்பனை வரி குறைப்பு கோரப்பட்ட போது, அவர், "இந்தப் பிரச்னையை ஸ்டாலினிடம் சொல்லுங்கள். அமைச்சர் என்கிற முறையில் நான் கலைஞரிடம் பேசுவதை விட, மகன் என்ற முறையில் அவர் பேசினால் நல்லதொரு முடிவு எடுக்கப்படும்" என்று குறிப்பிட்டாரே! இது எப்படிச் சரியாகும்?

ஸ்டாலின்: அது தவறான கருத்து! தபாலை, அண்ணாசாலை தபாலாபீஸில் போட்டாலும், ஆயிரம் விளக்கு தபால் ஆபீஸில் போட்டாலும், உரிய விலாசதாரருக்குத்தானே போய்ச் சேரும்? எனவே பிரச்னையை முதல்வர் கவனத்துக்குக் கொண்டு போக வேண்டியதுதான் முக்கியமே தவிர, யார் எடுத்துச் செல்வது என்பது முக்கியமில்லை. இதை நான் அந்த மேடையிலேயே, நாஞ்சிலாருக்குச் சுட்டிக் காட்டினேன்.

கல்கி: உங்களுடைய சினிமா பிரவேசம் தோல்வியடைந்ததற்கு என்ன காரணம்?

ஸ்டாலின்: எனக்குப் பிடித்த விதத்தில், சமுதாய சீர்திருத்தவாதியாய் நடிக்க வாய்ப்பு கிட்டியதால், நான் சினிமாவில் நடித்தேன். அதன்பின் வாய்ப்பு கிடைக்கவில்லை. அவ்வளவுதான். மறுபடியும்

வாய்ப்பு கிடைத்தால் நடிப்பேன்.

கல்கி: தேர்தலின் போது, ''செய்வதைச் சொல்வோம்; சொன்னதைச் செய்வோம்'' என்றது தி. மு. க. சமீபத்தில் 'சொல்லாததையும் செய்வோம்' என்று பேசியுள்ளீர்கள். அது என்ன?

ஸ்டாலின்: தேர்தல் அறிக்கையில் கூறாவிட்டாலும், மத்திய அரசு ஊழியர்களுக்கு இணையான ஊதியத்தை, மாநில அரசு ஊழியர்களுக்கு வழங்கியது; அதே போல, இலவச அரிசி திட்டத்தில் கூட, சொன்னதற்கும் அதிகமாகவே செய்திருக்கிறோம்.

கல்கி: அரசாங்க விழாக்கள், தனிநபர் பிரபை வளர்க்கும் விழாக்களாய் நடத்தப்படுவது எப்படிச் சரியாகும்?

ஸ்டாலின்: அரசாங்க விழா என்றாலும், அரசாங்கத்தை நடத்திச் செல்பவர் யார்? முதலமைச்சருக்குச் சம்பந்தமே இல்லாதது போல, அரசாங்கம் விழா நடத்த முடியுமா? முதலமைச்சரின் மக்கள் நல்வாழ்வுத் திட்டங்களை, அவரைக் கொண்டே ஆரம்பிப்பதில் என்ன தவறு?

கல்கி: தி. மு. க. வில் கலைஞர், பேராசிரியர் போன்றவர்களையடுத்து, தலைமையேற்கும் திறமை படைத்த இளைஞர் ஸ்டாலின் தான் என்று கூறப்படுவது பற்றி உங்கள் கருத்து என்ன?

ஸ்டாலின்: அப்படியெல்லாம் கிடையாது. கட்சித் தலைமை, கட்சியின் விருப்பத்துக்கு மாறாக, எவரையும் திணிக்க முடியாது. அ. தி. மு. க.வுக்கும், தி. மு. க.வுக்கும் இடையே உள்ள பெரிய வித்தியாசமே அது தான். அ. தி. மு. க.வுக்குத் திடமான அஸ்திவாரம் கிடையாது. அதனால்தான் எம்.ஜி.ஆருக்குப் பின் குழப்பம். ஆனால் தி. மு. க. கட்டுக்கோப்பான கட்சி. பெரும்பான்மையினர் கருத்துப்படிதான் இங்கே எதுவும் நடக்கும். என்னைத் தவிர, வை. கோபால்சாமி, துரை முருகன், ரகுமான் கான், அன்பில், பொய்யா மொழி என்று பலரும் இருக்கிறார்களே!

கல்கி: ஆனாலும் மற்றவர்களை விட, ஸ்டாலினின் முகம் பளிச்சென்று தெரிவதேன்?

ஸ்டாலின்: ஸ்டாலின் இளைஞர் அணி செயலாளராய் இருப்பதால்தான்.

கல்கி: இப்போது, ஒன்றுபட்டபின், அ. தி. மு. க.வின் பலம் கூடியுள்ளதா?

ஸ்டாலின்: இல்லை. அங்கே இன்னும் உட்கட்சி குழப்பங்கள் நீடித்து வருகின்றன.

கல்கி: காங்கிரஸ், அ. தி. மு. க. கூட்டு, தி. மு. க.வைப் பாதிக்குமல்லவா?

ஸ்டாலின்: அது தவறான கணக்கு. மிகக் குறுகிய காலத்திலேயே, தி. மு. க. அரசு ஆற்றியுள்ள பணிகள் அதிகம். இதனால் மக்களிடையே கழகத்துக்கு மதிப்பு கூடியுள்ளது.

கல்கி: இதற்குக் காரணம், இலவசத் திட்டங்கள்தானே?

ஸ்டாலின்: நெடுநாள் பயனளிக்கும் திட்டங்களாய்த் தொழில் முன்னேற்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வந்தாலும், மக்களுக்கு உடனடியாய்ப் பயனளிக்கும் திட்டங்களை நிறைவேற்ற வேண்டியதும் அவசியம். அதைத்தான் தி. மு. க. அரசு செய்கிறது.

கல்கி: ஆனால், இதுபோன்ற இலவசத் திட்டங்களை, அ. தி. மு. க. செய்த போது, தி. மு. க. கடுமையாய் விமர்சித்ததல்லவா?

ஸ்டாலின்: சத்துணவுத் திட்டத்தை நாங்கள் குறைகூறவில்லை. ஆனால் அது செயல்படுத்தப்பட்ட விதத்தில் நடந்த முறைகேடுகளைச் சுட்டிக் காட்டினோம். தேர்தலின் போது, நிஜமான சத்துணவு போடுவோம் என்றோம். இப்போது இலவச முட்டை போடப்படுகிறது. மாதம் இரண்டு முட்டை என்பதை வாரம் ஒன்றாய் அதிகரிக்கப் போகிறோம். சத்துணவுத் திட்டத்தில் முறைகேட்டைத் தடுக்கக் கண்காணிப்புக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

கல்கி: உங்களுக்கு அமைச்சர் பதவி தரப்படாதது குறித்து....

ஸ்டாலின்: மக்களுக்குப் பணிபுரிய வேண்டும் என்றால் மந்திரியாகத்தான் இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. எம்.எல்.ஏ. என்கிற முறையில், நான் ஆயிரம் விளக்குத் தொகுதி மக்களுக்குப் பணியாற்றினாலும், இளைஞன் என்கிற முறையில் இளைய தலைமுறையினரின் பிரச்னைகள் பற்றி சட்டசபையில் பேசியுள்ளேன். என் சட்டசபை கன்னிப் பேச்சே வேலையில்லாத் திண்டாட்டம் பற்றியது தான்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படங்கள்: **சுபா ஹரிபாபு**

அட்டை வண்ணப்படம்: **சுபா**

---



அடுத்த இதழில்......

ஹிட்லருக்குப் பிறகு வந்த ஹிட்லர்கள்!

# தமிழ்க் கடிமகன்!



எங்கள் அலுவலகத்தில் ஒரே மாதிரி, மரத்தாலான 'பால்பாயின்ட்' பேனா வைத்திருந்த இருவரில் ஒருவருடையது காணாமல் போகவே அடுத்தவரைக் கேட்டார். அதற்கு அவர்,

''உன் பேனாவை
என் பேனா என்பேனா...?
என் பேனா —
இது என் மரப்பேனா
அதை நான் மறப்பேனா...?''

என்று கவிதை ப(க)டித்தார். கேட்டவர் மறுநாள் முதல் ஒரு வாரம் மெடிக்கல் லீவு...!

— சீர்காழி ஸ்ரீராம்.



''நான் ஆயிரம் பக்கங்களில் எழுதிட்டு வந்திருக்கிற கதையைச் சுருக்கி உங்க பத்திரிகையில் இரண்டே வாரம் வர்ற மாதிரி போடப் போறீங்களா...! எப்படி சார்?''

''முதல் வாரம் முன்கதைச் சுருக்கமும் அடுத்த வாரம் பின்கதைச் சுருக்கமும் போட்டுடலாம்னு இருக்கோம்!''

— ஞா. ஞானமுத்து.







''ஆச்சரியமா இருக்கே: நீங்க இவ்வளவு பெரிய நடிகையா இருந்தும் கணவர் பெயரைச் சொல்ல இவ்வளவு வெட்கப்படறீங்களே...!''

''வெட்கம் இல்லை சார்! பெயரை மறந்து விட்டேன்...!''

— புன்னகை மன்னன்.



''ஏம்பா சர்வர்! நான் ஒரு பேப்பர் ரோஸ்ட்தானே பார்சல் கேட்டேன்; நீ ஏன் இரண்டு பேப்பர் ரோஸ்ட் ஆர்டர் பண்றே?''

''பார்சல் கட்ற பேப்பர் தீர்ந்துடுச்சு, சார்! அதான்!''



எதிர்க்கட்சிகள் சிறை நிரப்பும் போராட்டம் நடத்த உத்தேசித்துள்ளன - செய்தி






தமிழக இ.காங்கிரஸில் மூப்பனார் கோஷ்டியும் வாழப்பாடி கோஷ்டியும் ஒன்றையொன்று எதிர்த்து, தெருரோட்டுப் போராட்டம் நடத்துகின்றன!




மைய அரசு அதிக அரிசி தரக் கோரி ஆர்காடு வீராசாமி உண்ணாவிரதம் இருக்க விருப்பம் - செய்தி



# கல்கி

1989 செப்டம்பர் 24
மலர் 48 இதழ் 8
சுக்ல புரட்டாசி 8



## தமிழ்க்குடி மகனின் ஆதங்கம்!

அமரர் கல்கி அவர்களால் நிறுவப்பட்டு இன்று பொள்ளாச்சி நா. மகாலிங்கம் தலைமையில் கம்பீர நடை போடும் பாரதியார் சங்கம் வழக்கம் போலவே இந்த ஆண்டும் செப்டம்பர் 11, 12 தேதிகளில் பாரதி விழா கொண்டாடியது. விழாவில் பங்கேற்ற அனைவருமே, 'எல்லாத் துறைகளிலும் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும்' என்ற ஆசையைத் தங்கள் சொற்பொழிவினிடையே வெளிப்படுத்தினர். விழாவுக்குத் தலைமை ஏற்றிருந்த தமிழ்க்குடிமகன், 'பாரதியார் சங்கம், ஒரு தூதுக்குழு அமைத்து இந்த விஷயத்தை முதல்வரிடம் வந்து சொல்லலாம்; அவர் கவனித்து ஆவன செய்வார்' என்ற யோசனையைத் தெரிவித்தார். கூடவே ஓர் ஆதங்கத்தையும் வெளிப்படுத்தினார்: "எத்தனையோ மொழிகள் எவ்வளவோ முன்னேறியிருக்க, மிகத் தொன்மையான தமிழ் மொழி போதிய வளர்ச்சி அடையவில்லையே?"

தமிழ்க்குடிமகன் எழுப்பியது அர்த்தமுள்ள கேள்விதான். அதற்கு விடை என்ன என்பதையும் பார்க்க வேண்டும். 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்று நாளைக்கே தமக்குள்ள பெரும்பான்மை பலத்தைக் கொண்டு முதல்வர் சட்டம் இயற்றிவிட முடியும். ஆனால் அதை அமல்படுத்துவது எப்படி? போதிய அளவு தமிழ் வளர்ச்சி அடைந்தால் தானே அது சாத்தியமாகும்?

இதுமட்டுமா? நவீன விஞ்ஞான யுகத்துக்கு ஏற்பத் தமிழ் வளம்பெற வேண்டும். இருபத்தோராம் நூற்றாண்டை, அதன் பிரமிக்கத்தக்க விஞ்ஞான அற்புதங்களை எதிர்கொண்டு வரவேற்கத் தமிழ் தயார் நிலையில் இருக்க வேண்டும்! ராக்கெட் வேக வளர்ச்சி தேவை. இதை எப்படிச் சாதிப்பது?

ராஜாஜி இந்தப் பிரச்னை குறித்து நிறையவே யோசித்திருக்கிறார். ஆரம்ப காலத்தில் கலைச் சொற்களைத் தமிழில் மொழி பெயர்ப்பதில் அவரே ஆர்வம் காட்டியிருக்கிறார். பின்னர் டி. கே. சி. யின் கருத்தை ஏற்றுத் தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டார். வளர்ச்சிபெற்ற மொழிக்குத்தான் அகராதியே தவிர, கலைச் சொல் ஆக்கம் என்ற பெயரில் கோடிக் கணக்கில் செலவிட்டு, அகராதி தயாரிப்பதால் மொழி வளராது என உணர்ந்தார்! 'கலைச் சொற்களையெல்லாம் தமிழில் மொழி பெயர்த்துக் கொண்டிருப்பது வீண் வேலை; இலேசான ஒலி மாற்றம் செய்து தமிழில் எழுதிவிட்டால் போதும்; அவை தமிழாகி விடும்' என்பது டி. கே. சி. யின் கருத்து. 'டெலிபோன், ரயில், கார், சைக்கிள் போன்ற சொற்களைத் தமிழ் என்றே சமுதாயம் ஏற்றுக் கொண்டு விட்டது. அது போல இத்தானியம், கிரோமியம், யூரேனியம் போன்ற எண்ணற்ற விஞ்ஞானக் கலைச் சொற்களையும் தமிழ் என்றே ஏற்றுக் கொண்டு விடலாம்' என்பது டி. கே. சி. யின் முடிவு. ஆங்கில அகராதியைப் பாருங்கள்; அநேகமாக ஒவ்வோர் ஆங்கில வார்த்தையும் கிரேக்க அல்லது லத்தீன் மொழியிலிருந்து இலேசான ஒலி மாற்றத்துடன் பெறப்பட்ட சொல்லாகவே இருக்கும். இதுபோலவே தமிழும் ஆங்கிலச் சொற்களை ஏற்று ஜெட் வேகத்தில் வளரலாம்!

இந்த விஷயத்தை டி. கே. சி., ராஜாஜி மட்டுமல்ல; அவர்களுக்கு முன்பாகவே மகாகவி பாரதியாரும் கூறி வழிகாட்டியிருக்கிறார் என்பது கவனிக்கத்தக்கது. (பாரதி நூல்கள் — கட்டுரைகள் பக்கம் 516 — 518) 'ஆங்கிலப் பாடநூல்களை வைத்துக் கொண்டு, ஆங்கிலக் கலைச் சொற்களையே பயன்படுத்தி, தமிழில் ஆசிரியர்கள் விஷயத்தை மாணவர்களுக்கு விளக்கிக் கூறி வந்தால், தமிழ், அந்தக் கலைச் சொற்களை அப்படி அப்படியே நாளடைவில் ஏற்றுக் கொண்டுவிடும்' என்ற ராஜாஜியின் கருத்தும் ஏற்கெனவே பாரதி எழுதி வைத்துள்ள யோசனைதான்!

பாரத நாட்டில் உள்ள எல்லா மொழியினருமே இதே யோசனையைக் கையாண்டால், எல்லா இந்திய மொழிகளும் வேகமாக வளம் பெறுவதுடன் அறிஞர்களிடையே விஞ்ஞானக் கருத்துப் பரிமாற்றம் எளிதாகிப் போகும். அவ்வாறே உலக அரங்கிலும். தேச ஒருமைப்பாடு, உலக ஒருமைப்பாடு ஆகியன அர்த்தமுள்ளவையாகும். தமிழில் படித்த மாணவன், பிறநாட்டுப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து மேற்படிப்புப் படிக்கும் போதும் சிரமமிராது. தமிழில் விஞ்ஞான நூல்கள், பாடப் புத்தகங்கள் எழுதுவது எளிதாகும். அவற்றைப் படித்துப் புரிந்து கொள்ளவும் முடியும்! அந்நிலையில்தான் தமிழை எண்ணி நாம் பெருமைப்படுவதில் அர்த்தமிருக்கும்!

ஆனால் நாமோ, இருமொழித் திட்டம் என்ற அடிப்படையில் ஹிந்தியை ஒதுக்கி, சமஸ்கிருதத்தையும் கைவிட்டு, ஆங்கிலத்தின் தரத்தையும் குறைத்து, தமிழையும் தூய்மை காக்கிறோம் என்று கூறி, வளர விடாமல் அமுக்குகிறோம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

"சுவையான சம்பவங்கள்"—

# "நம்பிக்கை பலன் அளித்தது"

நான் ஸ்ரீராம் சிட்டின் பல பிரிவுகளில் அங்கத்தினராக உள்ளேன். அதனால் பலவிதத்தில் நல்ல சமயத்தில் நல்ல உதவியும் அடைந்துள்ளேன். அவற்றுள் முக்கியமான, நான் தக்க சமயத்தில் பலன் அடைந்துள்ள விஷயத்தை குறிப்பிட விரும்புகிறேன்.

அடையாறில் ஃபிளாட் வாங்குவதற்கு ஸ்ரீராம் சிட்ஸ் எனக்கு மிகவும் உதவியாக இருந்தது. அது ஏலச்சீட்டு. நானே ஏலத்தில் அதை எடுத்தேன். தக்க சமயத்தில் உதவியாக இருந்தது.

இன்னொரு "சிட்" போன அக்டோபரில் சேர்ந்தேன். ரூ. 30,000/— மாதம் ரூ. 500/— அதில் ஏலம் ஒரு மாதமும் குலுக்கல் ஒரு மாதமும் உள்ளது. என் சீட்டின் எண். 260072042.

என்னுடைய பெரிய பையன் அப்பொழுது 11 — வது படிவம் படித்துக் கொண்டிருந்தான். அவனுடைய என்ஜினியரிங் காலேஜ் படிப்பிற்காகவே உத்தேசம் பண்ணி இந்தச் சீட்டில் சேர்ந்தேன்.

இந்த வருடம் அவன் (ஏப்ரல் '89) 12—வது படிவப் பரீட்சை எழுதியிருந் தான். அதனால் ஜனவரி மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் குலுக்கலுக்கும், ஏலத்திற்கும் போய் வந்தேன். ஒன்றும் கிடைப்பதுபோல் இல்லை. ஏற்கெனவே ரூ. 15,000/— சீட்டு சேர்ந்து அதை ரூ. 11,600—க்கு ஏலத்தில் எடுத்து பிக்ஸட் டெபாசிட்டில் வைத்திருந்தேன். இதைத் தவிர வேறு எந்தச் சேமிப்பும் என்னிடம் இல்லை. என் மகன் ரொம்ப நன்றாகப் பரீட்சை எழுதி இருப்பதாகச் சொன் னான். எவ்வளவு நல்ல மதிப்பெண்கள் வாங்கியிருந்தாலும் என்ஜினியரிங் காலேஜில் இடம் கிடைப்பது கடினம். அதனால் காபிடேஷன் பீஸ் கட்டியாவது அவனை என்ஜினியரிங் காலேஜில் சேர்க்க வேண்டும் என்று என் கணவரும் நானும் தீர்மானித்திருந்தோம். நான், பாண்டிச்சேரியிலுள்ள அரவிந்த ஆஸ்ரமத் திற்கு அடிக்கடி போவேன். என் பிரச்னைகள் எல்லாவற்றையும் ஸ்ரீ அன்னை யிடமே விட்டுவிடுவேன். அதைப் போலவே என் பையனின் படிப்பிற்கும், அதற்குண்டான பணத்திற்கும் உள்ள பொறுப்பை ஸ்ரீ அன்னையிடமே விட்டு விட்டேன். என்ன ஆச்சரியம்! மே மாத குலுக்கலில் சீட்டு என் பெயருக்கு விழுந்தது. எங்கள் அனைவருக்கும் சொல்ல முடியாத அளவு சந்தோஷம். ஜூன் முதல் தேதி என் பையனுக்கு ரிசல்ட் வந்தது. நல்ல மார்க்குகள் எடுத்தி ருந்தும், மெரிட்டில் இடம் கிடைக்க வேண்டிய அளவு மதிப்பெண்கள் இல்லை. 78%தான் வந்தது. ஸ்ரீராம் சிட்ஸில் பணம் ஜூன் மாதம் 6 — ஆம் தேதி ரூ. 22,500/— கிடைத்தது. சமயத்தில் இந்தப் பணம் கிடைத்ததால் ஏற்கெனவே உள்ள பிக்ஸட் டெபாசிட் தொகை எல்லாவற்றையும் சேர்த்து எடுத்துக் கொண்டு மணிப்பாலில் என்ஜினியரிங் காலேஜில் ஜூன் மாதம் இரண்டாவது வாரம் இடம் கிடைத்ததும் சேர்த்தேன். சமயத்தில் பணமும் கிடைத்ததால் அவனைச் சேர்க்க முடிந்தது. தக்க சமயத்தில் என் மகனை என்ஜினியரிங் காலேஜில் சேர்க்க ஸ்ரீ அன்னை யின் அருளால் ஸ்ரீராம் சிட்ஸ் பணமும் கிடைத்தது. எங்கள் அனைவருக்கும் இன்றுகூட மிகவும் ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறது.

எங்கள் குடும்பத்தில் யாராலும் இந்த விஷயத்தை மறக்க முடியாது. ஸ்ரீராம் சிட்ஸின் தக்க சமயத்து உதவி என் பையனின் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத உதவியாகியது.

வாழ்க ஸ்ரீராம் சிட்ஸ்!

மீனாட்சி நாராயணன்,
147, லேக்வியூ ரோடு,
மேற்கு மாம்பலம்,
சென்னை — 600 033.

# ஜெயலலிதா ஆட்சிக்கு வந்தால்..?

நீங்கள்

கேட்டவை

— தராசு

* ஆட்சிக்கு வந்தால்....





* பிரசாரமே போதும்!



* ஐம்பதாண்டு ஜோக்!

*** சீர்காழி ஸ்ரீராம், தென்பாதி.**

**? முன் பின் தெரியாத யாருக்காவது உதவப் போய் வம்பில் மாட்டிக் கொண்டது உண்டா?**

! பெங்களூர் ஃபிலோமினா மருத்துவமனையில் ஒருவர் வந்து, 'என் கார் சாவி தொலைந்து விட்டது; கொஞ்சம் அதன் கதவைத் திறக்க உதவ முடியுமா?' என்று கேட்டார். பல கார் சாவிகள், ஸ்குரு டிரைவர் எல்லாம் உபயோகித்துத் திறக்க முயன்று கொண்டிருந்த போது, ஒரு தம்பதி வந்தனர். 'என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் எங்கள் காரை?' என்று அதட்டினர். தூக்கிவாரிப் போடத் திரும்பிப் பார்த்தால் உதவி கோரிய 'டிப்டாப்' ஆசாமியைக் காணவேயில்லை! தம்பதி நல்லவர்கள். நம்மைப் போலீஸுக்கு இழுக்காமல் விட்டுவிட்டார்கள். தப்பினோம் பிழைத்தோம் என்றிருந்தது!

*** எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

**? பள்ளிக் குழந்தைகளுக்கு இலவசமாகக் காலை டிபன் வழங்கப் போவதாகப் பாண்டிச்சேரி அரசு அறிவித்துள்ளதே?**

! போட்டி போட்டுக்கொண்டு, கல்வியைத் தவிர பாக்கி எல்லாவற்றையும் அளித்து வருகிறார்கள்!

*** புனிதவல்லி இளங்கோ, கடலூர்.**

**? 'இன்னும் ஐம்பது ஆண்டுகளில் ஒரு தமிழன் பிரதமராக வரக்கூடும் என்றால் அது நான்தான். வேறு யாரும் கிடையாது' என்று சுப்பிரமணிய சுவாமி கூறியிருப்பது குறித்து...?**

! 'வேறு யாரும் கிடையாது' என்ற பின் பகுதி உண்மை. முற்பகுதி அடுத்த ஐம்பது ஆண்டுகளுக்கு நினைத்து நினைத்துச் சிரிக்கக் கூடிய ஜோக்!

*** இரா. சண்முக சுந்தரம், கல்லிடைக் குறிச்சி.**

**? பெல்கிரேடில் நடந்த அணிசேரா நாடுகள் மாநாடு குறித்து?**

! வழக்கமான பேச்சுக்களையெல்லாம் யார் கவனித்தார்கள்! கடாஃபியின் பெண் பாதுகாவலரைத் தடுத்து நிறுத்தியதுதானே பெரிய செய்தியாகப் போய்விட்டது! அப்புறம் கடாஃபி ஃபைவ் ஸ்டார் கூடாரத்தில் தங்கியதும், அவர் ஊர்வலம் வர விமானத்தில் ஒட்டகம் வந்து இறங்கியதும், பாதுகாப்புக் காரணங்களுக்காக அந்த ஊர்வலம் ரத்தானதும்....

*** சண்பை. சிவசண்முகம், சீர்காழி.**

**? 'அ. தி. மு. க. வுடன் இ. காங்கிரஸ் கூட்டணி அமைவது காலத்தின் கட்டாயம்' என்று வாழப்பாடி பேசி உள்ளாரே?**

! அந்தச் சொற்றொடர், வீரப்பன் காப்பிரைட் உரிமை பெற்றுள்ள ஒன்று அல்ல என்று நிரூபிக்க விரும்புகிறார் போலும்! அப்படியானால் இதுபோன்ற அபத்தமான அரசியல் பல்டிகளையெல்லாம் நாம் சகித்துக் கொண்டு வாழ வேண்டியிருப்பதும் காலத்தின் கட்டாயம்தான்!



* நல்லெண்ணம்.



* பேசினாலும் பேசுவார்!



* காலத்தின் கட்டாயம்!



* அடிமேல் அடி!

*** எம். எம். கோபால், பம்பாய்.**

**? அமிதாபுக்கு அடிமேல் அடி போலிருக்கிறதே?**

! 'கங்கா — யமுனா — சரஸ்வதி'யும் 'ஜாதுகர்'ரும் அப்படியொன்றும் வசூலில் சக்கைப் போடு போடவில்லை என்று கேள்வி. பத்து மணி மகாபாரதத்தை இவருக்காக ஒன்பது மணி என்று மாற்றியும் கூடக் காலைக் காட்சிகளில் கூட்டம் குவிந்து விடவில்லையாமே! ஷூட்டிங்கின் போது எதிர்பாராத விபத்தாக வாங்கிய அடி, அரசியலில் அடி, சினிமா வசூலில் அடி... அடிமேல் அடிதான்.... அது சரி... பம்பாய்வாசியான உங்களுக்குத் தெரியாததுபோல் என்னைக் கேட்கிறீர்களே!

*** ப. மணிமுடி, பாபநாசம்.**

**? 'என். டி. ராமராவைத் தூக்கில் போட வேண்டும்' என்று வாழப்பாடி பேசி வருகிறாரே?**

! 'வி. பி. சிங்கைத் தூக்கில் போட வேண்டும்' என்று வடக்கே ஒருவர் பேசினால் 'என். டி. ஆரைத் தூக்கில் போட வேண்டும்' என்று பேசத் தெற்கே ஒருவர் தேவை தானே! மகாத்மா காந்திக்கு அவர் படம் அச்சாகியுள்ள தபால்தலையின் அறுபது பைசா மதிப்பைக் கூடத் தராத இன்றைய காங்கிரஸ்காரர்களிடம் வேறு எந்தவிதமான பேச்சை எதிர்பார்க்க முடியும்!

*** எல். ராம்பிரபு, கும்பகோணம்.**

**? 'தி. மு. க. ஆட்சி ஐந்தாண்டு காலம் நீடிக்கும், நீடிக்க வேண்டும்' என்கிறாரே மூப்பனார்?**

! முன்பு நடந்த தவறுகள் (ஆட்சி டிஸ்மிஸ்) மீண்டும் நடக்கக் கூடாது என்ற நல்லெண்ணம் அவருக்கு இருக்கலாம். ஆனால் காங்கிரஸிலும் அ. தி. மு. க. விலும் மற்றவர்களுக்கு அந்த நல்லெண்ணம் இல்லையே. எனவே, மூப்பனாரின் எண்ணம் நிறைவேற, இங்கு ஜெ — இ. கா. கூட்டணி நாடாளுமன்றத் தேர்தலில் தோற்க வேண்டும். ஒருவேளை இவர்கள் ஜெயித்தாலும் மத்தியில் ஆட்சி அமைக்க முடியாதவாறு காங்கிரஸ் தோற்க வேண்டும். இரண்டில் ஒன்று நடக்கவில்லையெனில் கலைஞருக்கு 'டாடா'தான்!

*** பாக்கியமுத்து, திருச்சி — 20.**

**? 'ராஜீவுக்கு எதிராகக் கிளர்ச்சி, செய்வதை விடப் பிரசாரமே போதும்' என்று கருணாநிதி கூறுகிறாரே?**

! பொறுப்புள்ள முதல்வர் இப்படித்தான் பேச வேண்டும். பந்த் நேரத்தில் தேசிய முன்னணிக்குக் கட்டுப்பட்டதால் இவ்வாறு பேசி நடந்து கொள்ள அவரால் முடியாமல் போனது துரதிர்ஷ்டமே.

*** கே. ராஜகோபாலன், சென்னை.***

**? போகிற போக்கைப் பார்த்தால் பதவி இழந்த பின் ராஜீவ் கூட போஃபோர்ஸ் ஊழலைப் பற்றிப் பேச ஆரம்பித்து விடுவார் போலிருக்கே...?**

! ராஜீவ்பேசினாலும்பேசுவார்,சோனியா பேச மாட்டார்!

*** எம். ராஜேந்திரன், லால்குடி.**

**? எம். ஜி. ஆர். மருத்துவப் பல்கலைக் கழக ஆரம்ப விழாவின் போது இறந்து போன எம். ஜி. ஆரைப் பற்றிக் குறிப்பிடுகையில் கலைஞர், ''இன்னா செய்தாரை'' என்று தொடங்கும் குறள் கூறியது சரியா?**

! ரசனைக் குறைவுதான். நல்லது செய்யும் போது, 'நல்லது செய்கிறோம்' என்ற கர்வம் துளியும் எட்டிப் பாராமல் செய்வது தான் மிக உயர்ந்த நிலை. அந்த மனப்பக்குவத்தை அடைவதென்பது எளிதான காரியமல்ல.

*** என். பாலையன், தக்கோலம்.**

**? 'ஜெயலலிதா ஆட்சிக்கு வந்தால் கருணாநிதி ஆட்சியை விட நிர்வாகம் சிறப்பாக இருக்கும்' என்று நான் சொல்கிறேன். இதை உம்மால் மறுக்க முடியுமா?**

! நான் மறுக்கவும் இல்லை, ஆமோதிக்கவும் இல்லை. அவர் மக்களின் ஆதரவைப் பெறுவாரேயானால், தாராளமாகப் பதவிக்கு வரட்டும்; நான் குறுக்கே நின்று தடுக்க முடியுமா என்ன? பதவிக்கு வந்தால், கலைஞரை விடச் சிறப்பாகத் தம்மால் ஆட்சி நடத்த முடியும் என்று நிரூபிக்கட்டும். சந்தோஷப்பட்டு வாழ்த்திவிட்டுப் போகிறோம்; தடையென்ன? குறைகள் இருப்பின் சுட்டிக்காட்டி விட்டுப் போகிறோம்; தயக்கமென்ன?

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**
**கே. ராஜகோபாலன்,**
**14, வேங்கடேஷ் நகர்,**
**விருகம்பாக்கம்,**
**சென்னை — 600 092.**

● வண்ணப்படம்: தம்பையா.

ஒரு தெப்போற்சவத்தின்
வனப்பு, வண்ணங்கள்,
நளினம், இறையுணர்வு
இவற்றை விஞ்சும் விதமாக
உருவாகி வருகிறது......

# கல்கி தீபாவளி மலர் '89



# சீட்டாட்டம்

கூலணா சம்பாதிச்சாலும் கண்ணியமாய் வாழ்ந்து வந்த குடும்பம் சக்கையனுடையது. திடீரென்று வில்லங்கம் வந்து வீதி வழியே ஊர்வலம் வைக்கும் என்று யார்தான் கனவு காண முடியும்...?

அம்மா காதில் கேட்டால் வாயிலும் வயிற்றிலும் போட்டுக் கொண்டு அழுவாளே...!

ரெண்டு குழந்தை; மூணாவதா ஒண்ணு வயித்துல சுமந்துட்டு வாயும் வயிறுமா இருந்த பூங்கொடி என்னான்னு சொல்லிப் புலம்பறாளோ... எப்படிக் கண்ணீர் வடிக்கிறாளோ...

நேற்று காலம்பற கழனிக்குப் புறப்படும் போதே,

''மச்சான்... பொழுதோட கூலிப் பணத்தை வாங்கிட்டு வூடு வந்து சேரு. வூட்டு மண்ணுப் பானையில மணியரிசி கூட இல்லே. பள்ளிக்கூடம் போற புள்ளைகளுக்கு எப்படியோ சத்துணவு கிடைச்சுடும். ஆனா என் வயித்துல வளர்ற புள்ளை புழுவாத் துடிச்சிடுவானே....!'' என்று கூறியிருந்தாள்.

அன்றும் —

பண்ணையார் தோப்பில் சக்கையனுக்கு அளவுக்கு மீறிய வேலை. அதையும் மீறின மன உளைச்சல். இரண்டு குழந்தைகளுக்கே பள்ளியில் சத்துணவுத் தட்டைப் பிச்சைப் பாத்திரமாக ஏந்தச் செய்து விட்ட தன் இழிந்த நிலை, இனி பிறக்கப் போகும் மூன்றாவது குழந்தைக்கும் நேர வேண்டுமா...? அடுத்தது ஜாக்கிரதையா இருந்துக்க வேணும்! டவுனாஸ்பத்திரி போய்ப் பிரசவம் பார்த்த கையோடு ஆபரேஷனும் செய்துக்க வேணும்.

இந்த மன உளைச்சலினூடே கையில் கிடைத்த கூலிப் பணத்தைப் பார்த்ததும் சந்தோஷம் எனும் சின்ன நீர்க்குமிழி அவன் மனத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டது. பணத்தைத் தன் கிழிந்து தொங்கின ட்ரவுசர் பாக்கெட்டில் போட்ட போது டவுனுக்குப் போய் ஒரு ட்ரவுசர் வாங்க வேண்டும் என்ற எண்ணம் வந்தது. அடுத்த கணமே.. 'அடச்சீ... இது என்ன சோட்டால அடிக்கிற சுயநலப்புத்தி...? பூங்கொடிகிட்டே இருந்த ஒரே நல்ல ஜாக்கெட்டும், போன வாரம் கிழிந்து விட்டது. பள்ளிக் கூடம் போற பயல்கள் பாவம், பஞ்சப் பரதேசிகள் மாதிரி நைந்ததும், கிழிந்ததும் அணிந்து செல்கின்றன....

பணம் கண்ட வேகத்தில் கிளர்ந்தெழுந்த சின்ன நீர்க்குமிழியும், பிரச்னைகளுக்கு எதிராக மல்லுக்கு நிற்க முடியாது 'பொட்'டென்று சிதறிப் போயிற்று.

தனது அழுக்கால் நிறம் மாறிப் போன துண்டு வேஷ்டியைத் தோளிலிருந்து எடுத்துத் தலையில் சுற்றியவன், வயல் வரப்பைப் பின்னிறுத்தி, ஊருக்கு ஒதுக்குப்புறமாயிருந்த கோயிலைத் தாண்டி நடந்தான்.

''அது யார்ராது.... சக்கையனா...?''

— குரல் ஏக வசனத்தில் கேட்டபோதே அது பரிச்சயப்பட்டுப் போன பண்ணையார் மகனின் குரல்தான் என்று உறுதி செய்து கொண்டு திரும்பினான்.

அந்தக் கோயில் திண்ணையில் நான்கைந்து பேர். அவர்களுக்கு நடுநாயகமாய்ப் பண்ணையார் மகன் முத்துவேலு. சக்கையனின் கைகள் அவனையறியாமலே தலை முண்டாசுக்குத் தாவி அவிழ்த்து, அதை இடுப்புக்கு அரணாக இறுகக் கட்டி விட்டு நெஞ்சுக்குக் குறுக்காக மடங்கின.

''ஐயா... கூப்பிட்டீங்களா...!''

''ஆமாம் கூப்பிட்டேன்... எங்கேடா போறே...? வீட்டுக்கா...?''

— கேட்ட பண்ணையார் மகன் முத்துவேலுவின் நாக்கு குழறியது. குடித்திருப்பார் போல. கண்கள் சிவக்க ஒரு மாதிரியாகக் காணப்பட்டார்.

''ஆமாம்ங்க சின்னய்யா... இப்பத்தான் நம்ம பண்ணைல. வேலை முடிஞ்சுது.. வூட்டுக்குப் போறேன்...!''

''வூட்டுக்கு... என்னடா... அப்படி அவசரம்...? அப்புறமா போவியாமா... இங்கே வா...! போயி நம்ம நாயக்கர் கடையில ஒரு பாக்கெட் ஃபில்டர் வில்ஸ் வாங்கிட்டு வா...!''

ஒரு பத்து ரூபாய்த் தாளை எடுத்து நீட்ட, இடுப்பில் சுருண்டிருந்த துண்டு வேஷ்டியைக் கையில் ஏந்தி, அவர் நீட்டிய பணத்தை அதில் ஏந்தப் போன சக்கையனின் பார்வை அவர்கள் குழுமியிருந்த இடத்தை ஆராய்ந்தது.

பண்ணையார் மகனின் மடியில் வரிசையாக அழகுபடுத்தப்பட்ட கோலத்தில் சீட்டுக் கற்றைகள் குப்புறக்கிடந்தன. ஏனையோரின் கரங்களிலும் விரிக்கப்பட்ட நிலையில் சீட்டுக்கள். கோவில் தரையில் புகைந்த பீடி, சிகரெட் துண்டங்களும் திருப்பிப் போடப்பட்ட சீட்டுக்களும் சிதறிக் கிடந்தன. அதற்கும் சற்றுத் தூரத்தில், வராந்தா மூலையில் அரைகுறையாகக் காலி செய்யப்பட்ட சில மது பாட்டில்கள்...

சக்கையனின் மனம் துணுக்குற்றது.

ஏதும் பேசாது முத்துவேலு நீட்டின பத்து ரூபாயைப் பெற்றுக் கொண்டு ஓடினவன் திரும்பி வந்த போது கையில் ஒரு பாக்கெட் சிகரெட்டும் மீதி சில்லறையும்!

சிகரெட் பாக்கெட்டை மட்டும் கையில் எடுத்துக் கொண்ட முத்துவேலு இவனைப் பார்த்து ஒரு மாதிரியாகச் சிரித்து விட்டு,

''சில்லறையை நீயே வச்சுக்க....!'' — என்றார்.

''பரவால்லைங்க ஐயா... வேண்டாம்...! உழைச்சுச் சம்பாதிக்கற காசே என்கிட்டே தக்க மாட்டேங்குது... இதுல இப்படி வர்ற காசு எனக்கெதுக்குங்க...?''

— அவன் முதல் வரியோடு நிறுத்தியிருக்கலாம்... வீட்டில் இருந்த வறுமைக் கொடுமைதான் அவனை இவ்வளவு விரக்தியாய்ப் பேச வைத்திருக்க வேண்டும்!

''அப்ப, நாங்க அநியாயமா சம்பாதிக்கறோம்ன்னு... சொல்லாமச் சொல்றியா டோய்...!'' — முத்துவேலு கையில் விரித்த சீட்டைக் கீழே போட்டார்.

''அய்யய்யோ... இல்லே சாமி... இல்லே... நான்... அதுவும் உங்களைப் போயி அப்படிச் சொல்லுவேனா... நீங்க எங்க குடும்பத்துக்கே படியளக்கிற பகவான் மாதிரி...!''

''சரி... சரி... போகட்டும்... இங்கே வா... அதோ... அந்த மூலையில இருக்கிற பிராந்தியை எடுத்து எங்களுக்கு ஊத்திக் கொடு... போ...!''

''ஐயா... நான்... வூட்டுக்கு...'' — நிறையத் தயங்கினான் சக்கையன்.

''என்னடா பொல்லாத வூடு... போய் ஊத்தி வாடா....!'' — கத்தினார்.

சக்கையனால் அதற்கு மேலும் மறுதலிக்க முடியவில்லை. பிராந்தி பாட்டிலை எடுத்து, கண்ணாடி டம்ளரில் ஊற்றும் போது கைகள் நடுங்கின. நிமிர்ந்து பார்த்தவனின் கண்கள் கோவிலின் மூல விக்கிரகத்தை நேரிடையாகச் சந்தித்தன. கற்பகாம்பிகையின் அந்தக் கருணை வடிவான முகம். 'அம்மா... தாயே, உன் இடத்துல தப்பு செய்யற இந்தப் பாவியை மன்னிச்சிடும்மா...

அவன் இப்படி நிலைகுலைந்து, மனம் வெம்ப, மனமுருக, மன்னிப்புக் கேட்டுக் கொண்ட போதுதான் அது நிகழ்ந்தது!

கையில் விரித்து வைத்த சீட்டுக்களை மூலைக்கொன்றாய் வீசி விட்டு, கீழே கிடந்த



சில்லறைகளைப் போட்டது போட்டபடி — விட்டு விட்டுப் பண்ணையார் மகனும் மற்றவர்களும் மூலைக்கொருவராய்ப் பிய்த்துக் கொண்டு ஓடினர். சக்கையன் செய்வதறியாது திகைத்து நின்றான்.

''ஓடு... ஓடு... போலீஸ்...'' — என்ற கூக்குரல்கள்.

'என்ன, ஏது' என்று இவன் நின்று நிதானிப்பதற்குள் கோயில் வாசலில் புழுதியைக் கிளப்பியபடி ஒரு ஜீப். அதிலிருந்து குதித்த போலீஸ்காரர்கள் மூலைக்கொருவராய் ஓட, அவர்களுக்கு உத்தரவு பிறப்பித்துக் கொண்டே ஓடி வந்த ஒரு போலீஸ் இவனை நெருங்கி விட்டார்.

பிடரியைப் பிடித்த அவர் இரும்புக்கரம் அவனை உலுக்கிற்று.

''கோவில்ல உட்கார்ந்துட்டு 'துரைகளுக்குச்' சீட்டாட்டம் வேண்டிக் கிடக்குதோ சீட்டாட்டம்....!''

— அவர் விட்ட அறை உடலின் ஒவ்வொரு நரம்பையும் தெறிக்கச் செய்தது.

''ஐயா... நான்... நான்... சீட்டாடலைங்க...! எனக்கு... சத்தியமா அது, விளையாடவே தெரியாதுங்க ஐயா...!''

— பயம், பதற்றம். அவனை நிலை கொள்ளாது வார்த்தைகளை உதிர்க்கச் செய்தன.

''என்ன... விளையாடவே, தெரியாதா...? ஏண்டா திமிரா... கையும், களவுமா பிடிச்ச பின்னாடி பொய்யா...? ஏண்டா டேய்... பட்டிக்காட்டுப் பக்கம் போலீஸ் புகாதுன்ற தைரியத்துல சாராயம் காய்ச்சறீங்க... சீட்டு விளையாடறீங்க... கையும் களவுமா புடிச்சுட்டா அப்பாவி மாதிரி வேஷம் போடறீங்க... உங்களை...''

— அவர் அடித்தொண்டையில் உறும, அதற்குள் வெளியே மற்றவர்களைத் துரத்தி ஓடின போலீஸ்காரர்கள் திரும்பி வந்தனர்.

''ஏட்டைய்யா சார்... அவங்களெல்லாம் தப்பிச்சுட்டாங்க...!''

''என்ன... தப்பிச்சுட்டாங்களா...?''

— கேட்ட ஏட்டய்யாவின் கோபம் முழுவதும் இவனிடம் திரும்பியது.

''எங்கேடா உன் கூட்டாளிக...?''

''கூட்டாளிகளா.. ஐயோ...! ஐயா நான் சொல்றதை நம்புங்க ஐயா... நான் சீட்டே விளையாடலைங்க... சாமி சத்தியமா மேலே எதுவும் கேட்காதீங்க...''

கீழே சிதறிக் கிடந்த சில்லறைகளையும், சீட்டுக்களையும் பொறுக்கி எடுத்துக் கொண்ட போலீஸார் இவனை இழுத்துச் சென்று ஜீப்பில் ஏற்றினர்.

**ஸ்**டேஷனுக்குக் கொண்டு போய், போலீஸ்காரர்கள் விசாரணை என்ற பெயரில் சித்திரவதை செய்த போதும் அவன் மசியவில்லை. வெயிலென்றும், மழையென்றும் பாராது கடினமாக உழைத்துக் கிடைத்த கூலிப் பணத்தை, அவன் பாக்கெட்டிலிருந்து பிடுங்கிச் 'சூதாடிச் சம்பாதித்த பணம்' என்று தாங்களே வைத்துக் கொண்டார்கள்; வயல் வரப்பை வெட்டி விட்டு, மடையைத் திறந்து விட்டு மண்வெட்டியும், கடப்பாரையும், கலப்பையும் பிடிச்சுக் காப்பேறின கைகளை விரித்துப் பார்த்துப் புழுங்கித் தவித்தான்.

"**எ**ழுந்திருடா போகலாம்...!''

— போலீஸ்காரரின் அதட்டலான குரல் அவனை நிகழ்கால உலகுக்கு உலுக்கியது. போலீஸ்காரர்கள் கைவிலங்கை மாட்டினர்.

சாலையில் வருவோர் போவோரின் பார்வையே தன் தேகத்தின் சிறு சிறு தோல் இடுக்குகள் வழியே ஊடுருவி ஊசிமுனையாகக் குத்திக் கிழித்திடும்படியான ஒரு வேதனை. சக்கையன் தலைகுனிந்தவாறு நடந்தான்.

''ஏண்டா... உனக்கு அபராதம் கட்டிக் கூட்டிட்டுப் போகச் சொந்தக்காரங்க யாராவது வருவாங்களா...?'' — ஒரு போலீஸ்காரர் கேட்டார்.

''வருவாங்க ஐயா.. ஆனா... பணம் கட்டி எடுக்கிற அளவுக்கு அவ்வளோவ் வசதி எங்களுக்கு இல்லைங்க ஐயா...!''

''ஓ, வசதியில்லையா... அப்ப உறுதியா தண்டனைதான். குறைஞ்சது பதினைஞ்சு நாள் காவலாவது கிடைக்கும். பேசாம குற்றம் செய்தேன்னு ஒப்புக்க, இதோட போகும்... இல்லே, கேஸுக்கு அலைய வேண்டி வந்துடும்.. வெளியே வந்து









— ஆர். வசந்தகுமார்.

## கோ-ஆப்டெக்ஸ்

# இல்லங்களுக்கு · எழிலூட்டும் · துணிவகைகள்













ஒவ்வொரு பெண்ணும் இல்லத்தரசி யாகிறாள்... உங்களது இல்லங்களில் அழகு மிளிர்ந்திட கோ-ஆப்டெக்ஸ் அளித்திடும் சிறந்த துணி வகைகள்— எண்ணற்ற வண்ணங்களில்.

- ☐ இதமான துவாலைகள்
- ☐ பரந்த படுக்கை விரிப்புகள்
- ☐ மனம் கவரும் மேசை விரிப்புத் துணிகள்
- ☐ புதுமை பொலிந்திடும் திரைச் சீலைத்துணி வகைகள்

**உங்கள் இனிய கனவுகள் நனவாகும் போது அதிலே கோ-ஆப்டெக்ஸின் பங்கும் உண்டு!**



**கோ-ஆப்டெக்ஸ்**

தமிழ் நாடு கைத்தறி

இந்தியாவின் உயர் விற்பனைக் கைத்தறி வகைகள்

DIPR 1089/M5/89/HTA

**எங்களது பிரத்தியேக ஆடையலங்கார அங்காடி கோலம், 843, அண்ணா சாலை, சென்னை — 2-க்கு விஜயம் செய்யுங்கள்.**



"ஏண்டா உங்கப்பா கண்ணீர் விட்டுக்கிட்டிருக்கார்?"

"அவர் ரஜினி ரசிகராச்சே! மூக்குப் பொடியை மேலே போட்டு ஸ்டைலா மூக்கிலே வாங்கிக்கப் பார்த்தார். அது கண்ணில் விழுந்துடுச்சு. அதான்!"

— கமுதி எஸ். சேதுராமன்.

அப்படித்தான் நீ என்ன சாதிக்கப் போறே.. ஜெயில் சோத்தைத் தின்னு உடம்பை வளர்த்திட்டுக் கொஞ்சம் ஊக்கமா வெளியே வந்து சேர்...!"

— அவர் பேச இவன் மனம் பதைத்தது. 'பதினஞ்சு நாளா... ஐயோ... அது வரைக்கும் புள்ளைகளும், பூங்கொடியும் என்ன பாடுபடுவாங்களோ... யார் கண்டா...?'

இவர்கள் சென்ற போது கோர்ட் ஹால் வெறிச்சோடிக் கிடந்தது. உள்ளே ஒரு மூலையில் இருந்த மரக் கூண்டுக்குள் இவனை நிறுத்தி விட்டு, கடா மீசை போலீஸ்காரர், எதிர் மூலையில் உட்கார்ந்து ஏதோ செய்து கொண்டிருந்த நான்கைந்து கோர்ட் சிப்பந்திகளை நோக்கிச் சென்றார்.

அவர்களிடம் இவர் ஏதோ சொல்ல, ஒருவர் அசுவாரசியமாய் நிமிர்ந்தார்.

"ரிமாண்ட் கேஸா...? இன்னைக்கு முடியாது சார்... கோர்ட் லீவு, மாஜிஸ்ட்ரேட் பிக்னிக் போயிட்டார்... 'அக்யூஸ்டைப் புரொடியூஸ்' பண்றதுனா நாளைக்கு வாங்க...!"

"இல்லே சார்... நேத்தே இந்த கேஸ் எஃப்.ஐ.ஆர். போட்டு அரெஸ்ட்டும் காட்டியாச்சு... அதனால இனியும் அக்யூஸ்டை நாங்க வச்சிருந்தா எங்க வேலைக்கு உலை வந்துடும்..."

"அப்ப என்ன செய்யலாம்ங்கறீங்க..."

"இந்த ரிமாண்ட் பெட்டிஷனை மேல் கோர்ட்டுக்கு அனுப்பினா பரவாயில்லை.."

இவனிடமிருந்து விடுபட்ட போலீஸ்காரர் அலட்சியமாய்ப் பேசின அலுவலரிடம் இப்படிச் சொன்னதோடு அவர் கைகளில் தம் பாக்கெட்டிலிருந்து ஒரு பத்து ரூபாய்த் தாளை எடுத்துத் திணித்தார்.

"என்னய்யா... ஃபோர் நாட் டூ... அவரை மட்டும் கவனிச்சா ஆச்சா...? அப்புறம் நாங்க எதுக்கு இருக்கோம்...?"

— மற்றவர்கள் கேட்க மேலும் சில பச்சை நோட்டுக்களை விநியோகம் செய்தார் ஃபோர் நாட் டூ...

சக்கையனுக்கு இவர்களின் பரிபாஷை அவ்வளவாகப் புரிபடவில்லை. என்றாலும் அவர்கள் கையில் பணம். அத்துடன் இருப்பது... கோயிலில் பண்ணையார் மகன் விளையாடினது போலவே சீட்டுக் கற்றைகள்.. விசிறி விசிறியாக... கீழே சில சில்லறைகள். மாஜிஸ்ட்ரேட்டு லீவு என்ற தைரியத்தில் கோர்ட்டு என்றும் பாராமல் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தனர்.

"சார்... கொஞ்சம் சீக்கிரம் வந்தா பரவாயில்லே...!"

சீட்டு விளையாடுவது குற்றம் என்று கேஸ் எழுதின போலீஸ்காரர் இந்த இடத்தில் அவர்களைக் கெஞ்சுவது போல் கேட்டார்.

"இருய்யா வந்துடறேன்... நீ கொடுத்த ரூபாயையும் வச்சு ஒரு ரவுண்டு பார்த்துடறேன்...!" — ஒருவர் விளையாட்டு மும்முரத்தில் பேசினார்.

"அது சரி... வந்திருக்கிற ஆளு என்ன கேஸு...?"

— மற்றொருவர் சிகரெட் பிடித்தபடி கையிலிருந்த சீட்டுகளின் மேல் கண் பதித்துக் கொண்டு கேட்க, போலீஸ்காரர் நெளிந்தார்.

"காசு வச்சு... சூதாடினதா...?"

மற்றவர்கள் அனைவரும் உடனே இவனைப் பார்த்துக் கொல்லென்று சிரித்தனர்.

"ஏய்யா... உங்களுக்கு வேறே கேஸே கிடைக்கலியா...?" — ஒருவன் கேட்க,

"ஏண்டா, டோய்... வர்றியா.. ஒரு ஆட்டம் 'ரம்மி' போடலாம்..." — மற்றொருவன் கிண்டலடித்தான்.

"யோவ் டவாலி... சும்மாயிருய்யா... பார்த்தா பட்டிக்காட்டான் போலயிருக்கான்... எங்காவது 'ஐயா' கிட்டே இசகு பிசகா உளறிடப் போறான்... சொல்லி வை..."

— என்று ஒருவர் அடிக்குரலில் எச்சரித்தார்.

"என்னய்யா பரசு... பேசிக்கிட்டே ஜோக்கரைக் கீழே விட்டுட்டே...? நல்ல ஜோக்கரய்யா நீ...! ம்.. இனி அதை நான் எடுக்கவும் கூடாது....!"

— ஒருவன் அலுத்துக் கொண்டு பேச, சக்கையன் அப்பாவி போல் விழித்தான். அவனுக்கு இதில் என்ன புரியும்...?

'...இதே சீட்டாட்டம் வெளியே நடந்தால் சமூக விரோதம்; அதுவே வழக்காடு மன்றத்தில் நடந்தால் நியாயம்...!' என்று நினைக்கக் கூட வார்த்தைகள் சிக்காத பாமரன் அவன்.

# யூ ரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.

வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும் — இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.



செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்யும் கிளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.

**யூரோக்ளீன்**: உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும். **அக்வாகார்ட்**: ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.



உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

**அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.**



| யூரோக்ளீன் | அக்வாகார்ட் | யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட |
|---|---|---|
| அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் — வேக்யும் க்ளீனரை விட சிறந்தது. | நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபையர். | நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள். |

everest/89/EFL/188 R1-tm

# கொத்துக் கொத்தாகத் தங்கப் பதக்கங்கள்!

**பஸ்ஸுக்காக ஓடினாலே மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கத் திணறுகிறோம்... ஆயிரம் மீட்டர், பத்தாயிரம் மீட்டர் என்று அனாயாசமாக மட்டுமின்றி ஆசையுடனும் ஓடும் ஒருவரைப் பற்றி.......**

படு பிஸியாக இருந்த அமைப்பாளர்களிடம் தயங்கித் தயங்கி, எதையோ விசாரித்துக் கொண்டிருந்தார் அந்த இளைஞர். இரண்டு, மூன்று பேர் உதட்டைப் பிதுக்கி விடவே, 'சிவனே' என்று அமைதியாக ஓர் ஓரத்தில்போய் நின்று கொண்டார். அவரைச் சுற்றிலும் இளைஞர்களும் யுவதிகளும் குதித்துக் கும்மாளமிட்டுக் கொண்டும், அங்குமிங்கும் சிட்டாய்ப் பறந்து கொண்டும் இருந்தனர். அவர்கள் எல்லோருமே இம்மாத ஆரம்பத்தில், தேசிய அளவிலான தடகளப் போட்டிகளில் பங்கேற்கச் சென்னை, ராஜரத்தினம் ஸ்டேடியத்துக்கு வந்திருந்தவர்கள்.

ஒதுங்கி ஓரமாய் நின்ற இளைஞரை அணுகினோம்.

''நீங்கள்தானே பகதூர் பிரசாத்?''

''ஹான் ஜீ!''

''கல்கிக்கு ஒரு பேட்டி வேண்டுமே....?''

நாணம் கலந்த புன்னகையில் முகம் சிவக்க, ''ஹிந்தியில் மட்டுமே பேச முடியும்'' என்றார் பகதூர் பிரசாத்.

பேசினோம்.

''அமைப்பாளர்களிடம் ஏதோ விசாரித்தீர்கள் போலிருக்கிறதே....?''

''ஆமாம். இந்தப் போட்டியில் எனக்கு வர வேண்டிய மூன்று சர்டிஃபிகேட்களுள் ஒன்று மட்டுமே கைக்கு வந்துள்ளது. மற்ற இரண்டை எங்கே பெற வேண்டும் என்று விசாரித்தேன். விவரம் தெரியவில்லை. எப்படியும் மானேஜர் கொண்டு வந்து விடுவார்....'' என்றார் அமைதியாக.

அன்று காலைதான் பத்தாயிரம் மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் முதலிடம் பெற்றிருந்தார் பகதூர் பிரசாத். போட்டியின் முதல் நாளில் ஆயிரத்து ஐந்நூறு மீட்டர் மற்றும் ஐயாயிரம் மீட்டர் பந்தயங்களில் முதலாவதாக வந்திருந்தார். மூன்று தங்கப் பதக்கங்களையும் அள்ளிக் கொண்டு, இப்படி அமைதியாக — ஏகாந்தியாக...!

''ஆச்சரியமில்லை'' என்றார்கள் சுற்றி இருந்தவர்கள்.

''இவர் பத்தாயிரம் மீட்டரை முடித்த போது சுற்றி இருந்த பி. டி. உஷா, ஷைனி உள்பட பல வீரர்கள் குதூகலத்துடன் பாராட்டினார்கள். எல்லோருக்கும் பகதூர் ஒரு புன்னகையை மட்டுமே பதிலாக அளித்தார்.''

இப்படிக் கொத்துக் கொத்தாய்த் தங்கப் பதக்கங்கள் பெறுவது பகதூர் பிரசாத்துக்குப் புது அனுபவம் அல்ல என்று அவரிடம் பேசிய போது தெரிந்தது:

87 ல் திருவனந்தபுரத்தில் நடந்த போட்டியில், 10,000 மீட்டரில் தங்கப் பதக்கம். இதுதான் ஆரம்பம். 88 ல் கான்பூரில் வெண்கலப் பதக்கம். குண்டூரில் மறுபடி 5,000 மீட்டர், 10,000 மீட்டர் இரண்டிலும் தங்கப் பதக்கங்கள்.

பிப்ரவரி 89 ல், தில்லியில் ரயில்வேக்களுக்கு இடையேயான போட்டியில் 5000 மீட்டர், 10,000 மீட்டரில் மறுபடி இரண்டு தங்க மெடல்கள். மார்ச்சில் பாகிஸ்தான் லாகூரில் அதே கதை!

சென்ற மாதம் ஸ்காட்டிஷ் நேஷனல் சாம்பியன்ஷிப் பயிற்சி மற்றும் போட்டியில், பிரிட்டனிலுள்ள கிளாஸ்கோவில் மறுபடி 5000 மீட்டர்களை 14 நிமிடம் ஒரு செகண்டில் ஓடி, ஒரு தங்கப் பதக்கம். 3000 மீட்டரில் ஒரு புதிய இந்திய ரெக்கார்டு படைத்து, அதற்கு ஒரு தங்கப் பதக்கம். அமெச்சூர் அத்லெடிக்ஸ் ஃபெடரேஷனின் தமிழ் நாட்டுக் கிளையும், ஸ்போர்ட்ஸ் அதாரிடி ஆஃப் இந்தியாவும் இணைந்து ஏற்பாடு செய்திருந்த இந்த சென்னைப் போட்டியில் மூன்று!

''உங்களுக்கு மொத்தமாக எத்தனை தங்கப் பதக்கங்கள் இதுவரை கிடைத்திருக்

கின்றனை?'' என்று கேட்ட போது அவரே சற்றுத் தடுமாறினார் டக்கென்று பதில் சொல்ல. ''ஒரு டஜனை எட்டி விட்டது'' என்று சொன்ன போது அப்பாவித்தனமான ஒரு சிரிப்பு....!

செண்ட்ரல் ரயில்வேயில், ஆக்ரா கன்டோன்மென்டில் டி. டி. இ. ஆகப் பணியிலிருக்கும் 24 வயது பகதூர் பிரசாத், உத்தரப் பிரதேச மாநில பல்லியா மாவட்டத்திலுள்ள பிலேவா கிராமத்தைச் சேர்ந்தவர். இது பல்லியாவிலிருந்து சுமார் 45 கிலோ மீட்டர் தூரம்.

விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த பிள்ளை. அப்பா ஸ்ரீதாரிராம், அம்மா ராம்ரதி.இருவருமே, மகனின் இந்த மகோன்னத வளர்ச்சியையும், புகழையும் காண இன்று இல்லை. உடன் பிறந்த சகோதரர் ஒருவர்; சகோதரிகள் இரண்டு பேர். சகோதரர் விவசாயத்தைச் செய்து கொண்டு கிராமத்திலேயே தங்கியிருக்கிறார். உடன் பிறந்தவர்கள் யாருக்குமே ஸ்போர்ட்ஸில் ஆர்வம் கிடையாது! பின் பகதூர் மட்டும் எப்படி....?

பத்தாவது வரை படித்தேன். கிராமத்துப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போது கூட விளையாட்டில் அதிக ஆர்வம் காண்பித்தது கிடையாது!''

''பிறகு?''

''உத்தரப்பிரதேச போலீசில் இரண்டு வருடங்கள் ஒன்பது மாதங்கள் பணியாற்றினேன். அங்கே 'போலீஸ் மீட்' களில் பலரும் கலந்து கொண்டு போட்டிகளில் வெற்றி பெற்று, புகழும் அந்தஸ்தும் அடைந்ததைப் பார்த்த போதுதான் நாமும் ஏன் இவற்றில் பங்கு கொள்ளக் கூடாது என்று தோன்றியது. இதற்கு ரயில்வேயில் ஆதரவும், வாய்ப்பும் இருக்கவே 88ல் இங்கு பணியில் சேர்ந்தேன். பிறகுதான் முறையான பயிற்சி எல்லாம். கிராமத்தில் பயிற்சி என்று எதுவுமே கிடையாது. அவர்களுக்கு அது பற்றி எல்லாம் ஒன்றும் தெரியவும் தெரியாது!''

கேட்கச் சற்று வியப்பாகவே இருந்தது.

டிக்கட் எக்சாமினர் பதவி என்றாலும், அதைச் செய்ய வேண்டியதில்லை என்றார். முழுக்க முழுக்க ரயில்வேயின் விளையாட்டு வீரராகப் பெயரும் புகழும் தேடித் தருவதே இவர் வேலை.

''அப்படியானால் போட்டிகள் இல்லாத



நாட்களில், மாதங்களில் எல்லாம் என்ன செய்வீர்கள்?''

''தேசிய காம்ப்களில் பயிற்சி பெற வேண்டும். பட்டியாலாவில் இருக்கும் நேஷனல் இன்ஸ்டிட்யூட் அஃப் ஸ்போர்ட்ஸ் முகாம், தில்லி ஜவஹர்லால் நேரு ஸ்டேடிய பயிற்சி முகாம் இரண்டிலும் மாறி மாறிப் பயிற்சி பெற வேண்டும்.''

''உங்கள் 'கோச்' யார்?''

''இந்தப் பயிற்சி முகாம்களில் ஜோகிந்தர் சிங் டைகரும், ஹரீஷ் சந்தும். 88 முதல் ரயில்வே கோச் ஹர்கோபிந்திடம் தனியே பயிற்சி பெற்று வருகிறேன். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு என்று எதுவும் இல்லை.''

''லண்டன் போயிருந்தீர்களே — அங்கே என்ன பயிற்சி?''

''இந்திய அரசாங்கம் பத்துப் பேரைத் தேர்ந்தெடுத்து கிளாஸ்கோவுக்கு அனுப்பி வைத்தது. அதில் நானும் ஒருவன். அங்கே 'கோச்' ஹாரிவில்சன். மூன்று வாரப் பயிற்சி. மிகக் கடுமையான பயிற்சி. டிராக் விஷயத்தில் அருமையான ஆலோசனைகள் சொல்லுவார் ஹாரி வில்சன்.''

''ஓட்டப் பந்தயங்களில் வெற்றி காண ஏதானும் பிளான் வைத்துக் கொண்டு அதன்படி செயல்படுகிறீர்களா?''

''அப்படி எல்லாம் எதுவும் இல்லை. ஓட்ட ஆரம்பத்திலேயே அடித்துப் பிடித்துக் கொண்டு முன்னே ஓடாமல், நிதானமாகத் துவங்கி, மற்ற வீரர்களின் ஓட்டத்தைக் கணித்துக் கொண்டு மெல்ல மெல்ல முந்துவேன்.. ஐயாயிரம், பத்தாயிரம் மீட்டர் பந்தயங்களில், முதலிலேயே களைத்து விடாமல், இரண்டு அல்லது மூன்று சுற்றுப் பாக்கி இருக்கும் போது மட்டுமே ஓட்டத்தின் வேகத்தை அதிகப்படுத்துவேன். பந்தயத்துக்கு முன்னால் மட்டுமின்றி அன்றாடம் பயிற்சிக்கு முன்னாலும் பிரார்த்தனை செய்து விட்டுத்தான் ஓட்டத்தைத் துவங்குவேன்.''

''எந்தெந்தப் போட்டிகளில் கலந்து கொள்ள வேண்டும் என்று நீங்களே தீர்மானிப்பீர்களா?''

''கிடையாது. அரசாங்கம் எப்படித் திட்டம் போடுகிறதோ அப்படி!''

நவம்பர் 89ல் தில்லியில் ஏஷியன் டிராக் அண்ட்ஃபீல்ட்போட்டிகளில்கலந்துகொள்ள விருக்கிறார். அப்புறம் ஏஷியாட்.

''ஒலிம்பிக்?''

''அதற்கு இன்னும் எத்தனையோ தூரம் இருக்கிறது!'' என்று மிகவும் இயல்பான அடக்கத்துடன் சொன்னார்.

''பகதூர் பிரசாத் இந்திய ஓட்ட வீரர்களுள் நம்பிக்கை நட்சத்திரம். அவரது வெற்றிகளை, முன்னேற்றத்தை, நான் உன்னிப்பாகக் கவனித்து வருகிறேன்'' என்று சமீபத்தில் அவரது ஆங்கிலேயப் பயிற்சியாளர் ஹாரிவில்சன் சொன்னது நினைவுக்கு வந்தது.

''சென்னை, பம்பாய், தில்லி, கல்கத்தா என்று எல்லா நகரங்களையும் பார்த்திருக்கிறீர்கள். எது பிடித்தது?'' என விடை பெறும் முன் கேட்டோம்.

சற்றே யோசித்தார் பகதூர் பிரசாத். பிறகு ''பம்பாய்!'' என்றார்.

''ஏன் பம்பாய்?''

''அங்கேதான் எல்லாமே ஃபாஸ்ட்டாக இருக்கிறது!'' என்றார்.

ஓட்டப்பந்தய வீரர் அல்லவா!

பேட்டி: **சாருகேசி**

வண்ணப்படம்: **ரவிசங்கரன்**

---



பகவான் ராமகிருஷ்ணரிடம் அவரைத் தரிசிக்க வந்த ஒருவர், 'சுவாமி! பூஜையின் மூலம்தான் பக்தியைக் காட்ட வேண்டுமா? அந்த உணர்வு நம்முடைய உள்ளத்திலே இருந்தால் போதாதா?'' என்று கேட்டார்.

''எனக்குத் தாகமாக இருக்கிறது. சிறிது தண்ணீர் கொண்டு வா'' என்றார் ராமகிருஷ்ணர்.

அவர் உடனே ஓடிப் போய் ஒரு சிறு சொம்பில் தண்ணீரைக் கொண்டு வந்தார்.

''நான் உன்னிடம் தண்ணீர் அல்லவா கேட்டேன்? நீ ஏதோ ஒரு சொம்பைக் கொண்டு வந்து கொடுக்கிறாயே?'' என்றார்.

''சுவாமி! தாங்கள் கேட்டது தண்ணீர்தான். ஆனால் அதை எப்படிக் கொண்டு வருவது? அது நிறைந்து நிற்க ஒரு பாத்திரமும் தேவை அல்லவா?'' என்று தயங்கியபடி பணிவாகக் கூறினார்.

''நீ சற்று முன்னால் கேட்ட கேள்விக்கும் பதிலும் இதிலேயே அடங்கி இருக்கிறது. அருந்தும் தண்ணீரைக் கொண்டு வர பாத்திரம் தேவை. அதே போல் நமது மனம் பக்தியில் ஈடுபடும் சூழ்நிலையை உண்டாக்கப் பூஜையும் அவசியமாகிறது'' என்றார் பகவான் ராமகிருஷ்ணர்.

— டி. கே. பானு, மதுரை — 9.

அவனுக்குத் தேவை
ஜோரான ருசி...

அம்மாவுக்கோ
போஷாக்கில்தான் குறி...

## இருவரும் விரும்புவது

## புதிய கேம்ப்கோ வின்னர்

இது ஜோரான ருசியுள்ள சாக்கலேட் பானம். மற்ற பானங்களைவிட மும்மடங்கு அதிகமாக வின்னரில் உள்ள சாக்கலேட் சுவை குழந்தைகளுக்குக் குதூகல மூட்டுகிறது.

ருசி மட்டுமா? சக்தி தரும் குளுகோஸ் சத்தும் நிறைந்தது வின்னர். எனவேதான் பிள்ளைகளோடு அன்னையரும் வின்னரையே விரும்பித் தேர்ந்தெடுக்கின்றனர்.

குழந்தைகளின் முழுமையான வளர்ச்சிக்கு அத்தியாவசியமான வைட்டமின்களும் மினரல்களும் நிறைந்த வின்னர் சூடான மற்றும் குளிர்ச்சியான பாலில் மிக எளிதாகக்கரைகிறது.

கேம்ப்கோ வின்னரையே தேர்ந்தெடுங்கள். அது ருசியில் 'வின்னர்', போஷாக்கிலும் 'வின்னர்'.












கேம்பகோ
லிமிடெட், மங்களூர்

R. K. SWAMY/CL/7247

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 29

## சந்தேக விபரீதம்

பொன்னியின் செல்வர் அரண்மனைக்கு உள்ளே சென்றபிறகு, காலாந்தக கண்டர் அரண்மனை வாசலில் வந்து சேர்ந்து கொண்டிருந்த வேளக்காரப் படை வீரர்களை நெருங்கினார்.

"இது என்ன கூச்சல்? அரண்மனைக்குள்ளே சக்கரவர்த்தி நோயுடன் படுத்திருப்பது உங்களுக்குத் தெரியாதா? கோட்டையைச் சுற்றிப் பகைவர் படை சூழ்ந்திருப்பது தெரியாதா?" என்று கடுமை தொனிக்கும் குரலில் கேட்டார்.

வேளக்காரப் படையின் தலைவன், "ஐயா! கோட்டையைச் சூழ்ந்திருப்பவர்கள் பகைவர்கள்தானா? கொடும்பாளூர்ப் பெரிய வேளார் நமக்குப் பகைவர் ஆனது எப்படி?" என்று கேட்டான்.

சின்னப் பழுவேட்டரையர் பொங்கி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு, "அதை அவரிடந்தான் கேட்க வேண்டும்! பகைவர் இல்லையென்றால், எதற்காகச் சைன்யத்துடன் வந்து கோட்டையை முற்றுகையிட்டிருக்கிறார்?" என்று கேட்டார்.

"சின்ன இளவரசரைச் சிம்மாசனத்தில் ஏற்றி முடிசூட்டுவதற்காக என்று கேள்விப்படுகிறோம்" என்றான் வேளக்காரப் படைத் தலைவன்.

"அது உங்களுக்குக்கெல்லாம் சம்மதமா?" என்று சின்னப்பழுவேட்டரையர் கேட்டார்.

வேளக்காரப் படைத் தலைவன் தன் வீரர்களைத் திரும்பிப் பார்த்து, "நீங்களே சொல்லுங்கள்!" என்றான்.

வீரர்கள் உடனே "சம்மதம்! சம்மதம்! பொன்னியின் செல்வர் வாழ்க! ஈழங் கொண்ட இளவரசர் வாழ்க!" என்று கோஷித்தார்கள்.

இம்முறை அந்தக் கோஷம் முன்னை விட அதிக வலுவுடையதாயிருந்தது.

சின்னப் பழுவேட்டரையரின் முகம் சிவந்தது. மீசை துடித்தது. ஆயினும் பல்லைக் கடித்துக் கொண்டு, "முடிசூட்டுவது பெரிய வேளாரின் இஷ்டத்தைப் பொறுத்ததா? அல்லது உங்கள் விருப்பத்தைப் பொறுத்ததா? சக்கரவர்த்தியின் விருப்பத்துக்கு மதிப்பு ஒன்றும் இல்லையா?" என்று கேட்டார்.

வீரர்களில் ஒருவன் "தளபதி! சக்கரவர்த்தி சௌக்கியமாயிருக்கிறாரா! நிச்சயந்தானா?" என்று கேட்டான்.

"இது என்ன கேள்வி?" என்று காலாந்தகர் சீறினார்.

"சக்கரவர்த்தியைப் பற்றி ஊரில் ஏதேதோ வதந்தி பரவியிருக்கிறது. நாங்களும் அவரை இன்று பார்க்க முடியவில்லை! அதனால் அவருடைய சுகத்தைப் பற்றி எல்லாரும் மிக்க கவலை அடைந்திருக்கிறோம்!" என்று வேளக்காரப் படை வீரர்களின் தலைவன் கூறினான்.

அமரர் கல்கி

''சக்கரவர்த்தியை நீங்கள் பார்க்க முடியாத காரணம் முன்னமே நான் சொல்லவில்லையா? சக்கரவர்த்தியின் மனக்குழப்பம் இன்று அதிகமாயிருந்தது. யாரையும் பார்ப்பதற்கு அவர் விரும்பவில்லை. சபா மண்டபத்திற்கு வருவதற்கும் மறுத்து விட்டார்.....''

''சக்கரவர்த்தியின் மனக் குழப்பத்திற்குக் காரணம் என்ன? ஏன் எங்களுக்குத் தரிசனம் அளிப்பதற்கு மறுக்க வேண்டும்? நாங்கள் அதையாவது தெரிந்து கொள்ளலாம் அல்லவா?''

''நல்லது; சொல்லுகிறேன். ஈழத்துக்குச் சென்றிருந்த இளவரசரைப் பற்றி ஒன்றும் தெரியாமலிருந்ததுதான் சக்கரவர்த்தியின் கவலை அதிகமானதற்குக் காரணம். இப்போது இளவரசரே வந்து விட்டபடியால்...''

''இளவரசரை நாங்கள் பார்க்க வேண்டும். நன்றாக வெளிச்சத்தில் பார்க்க வேண்டும்!'' என்று அந்தப் படையினரில் ஒரு வீரன் கூறினான்.

''ஆமாம்; பார்க்க வேண்டும்! ஈழங் கொண்ட இளவரசர் வாழ்க!'' என்று எல்லாரும் சேர்ந்து கூவினார்கள்.

''இளவரசர் முதலில் சக்கரவர்த்தியைத் தரிசிக்க வேண்டும் அல்லவா? பிறகு இஷ்டப்பட்டால் உங்களையும் வந்து பார்ப்பார்!''

''நிச்சயந்தானா? ஒரு வேளை பாதாளச் சிறைக்கு அனுப்பப்படுவாரா?''

வேறொரு நாளாக, வேறொரு சந்தர்ப்பமாக இருந்தால், வேளக்காரப் படையினர் இவ்வளவு துடுக்காகப் பேசியதற்குச் சின்னப் பழுவேட்டரையரின் வீரர்கள் அவர்கள் மீது போர் தொடுத்திருப்பார்கள்; பெரிய ரகளையாகப் போயிருக்கும். ஆனால் இளவரசரின் திருமுகத்தைச் சற்றுமுன் பார்த்த காரணத்தினாலோ, என்னமோ, காலாந்தக கண்டரின் வீரர்களும் மௌனமாக நின்று கொண்டிருந்தார்கள்.

சின்னப் பழுவேட்டரையருடைய கை அவருடைய உடை வாளை நாடியது. மேற்கண்டவாறு கேட்ட வீரனை ஒரே வெட்டில் வெட்டிக் கொன்றுவிட வேண்டுமென்று ஒரு கணம் எண்ணினார். உடனே அந்தக் கோபத்தைச் சமாளித்துக் கொண்டு உரத்துச் சிரித்தார்.

''இவன் கேட்ட கேள்வி உங்கள் காதிலெல்லாம் விழுந்ததல்லவா? இளவரசர் பாதாளச் சிறைக்கு அனுப்பப் படுவாரா என்று கேட்கிறான். நல்லது; இளவரசரைச் சிங்காதனத்தில் ஏற்றி முடிசூட்டுவதோ, பாதாளச் சிறைக்கு அனுப்புவதோ என்னுடைய அதிகாரத்தில் இல்லை. சக்கரவர்த்தியின் விருப்பத்தின்படி நடக்கும். இளவரசரைப் பாதாளச் சிறைக்குக் கொண்டு போவதாயிருந்தாலும், இந்த வழியே தான் கொண்டு போக வேண்டும். அப்போது நீங்கள் அவரைப் பார்த்துக் கொள்ளலாம்!'' என்று காலாந்தக கண்டர் கண்களில் கனல் பறக்கக் கூறி விட்டு, அரண்மனைப் பக்கம் திரும்பினார். வீரர்கள் மீண்டும் கோஷமிட்டதையும் பொருட்படுத்தாமல் அரண்மனை முன் வாசலை நோக்கிச் சென்றார்.

அங்கே வாசற்படிக்கு அருகில் பூங்குழலி தன்னந் தனியாக நின்று கொண்டிருப்பதைக் கண்டார்.

''பெண்ணே! நீ ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறாய்? உன்னை உள்ளே வர வேண்டாம் என்று தடுத்து விட்டார்களா?'' என்று கேட்டார்.

''என்னை யாரும் தடுக்கவில்லை; நானாகவே நின்று விட்டேன், ஐயா!'' என்றாள் பூங்குழலி.

''ஏன்?''

''வெகுநாட்களாகப் பிரிந்திருந்த தந்தையும் மகனும் சந்திக்கும் வேளையில் எனக்கு என்ன அங்கே வேலை?''

''போகட்டும்; நீயாவது சக்கரவர்த்தி உயிரோடு இருக்கிறார் என்று நம்புகிறாயே, அந்த மட்டில் சந்தோஷம்!''

''நம்புவது மட்டுமில்லை. சக்கரவர்த்தி சௌக்கியமாயிருப்பதைக் கண்ணாலேயே பார்த்துவிட்டுத் தான் திரும்பிவந்தேன்.''

''அதோ நிற்கிறார்களே, அந்த வேளக்காரப் படையாரிடம் நீ பார்த்ததைச் சொல்! அவர்கள் சந்தேகப்படுவதாகத் தோன்றுகிறது!'' என்றார்.

''அவர்களுடைய சந்தேகத்துக்கு இந்த நிமிஷம் வரையில் ஆதாரம் இல்லை. அடுத்த நிமிஷம் அது உண்மையாகாது என்று யார் சொல்ல முடியும்?''

''பெண்ணே! நீயும் சேர்ந்து என்னைக் கலவரப் படுத்தப் பார்க்கிறாயா? உங்கள் எல்லாருக்கும் பைத்தியம் பிடித்து விட்டதா?'' என்று கேட்டார்.

''தளபதி! என்னைப் பலர் 'பைத்தியம்' என்று சொல்லுவதுண்டு. நானே என்னைப் பைத்தியம் என்று சொல்லிக் கொள்வதுமுண்டு. ஆனால் இந்தப் பைத்தியத்தின் யோசனையைக் கேட்டபடியினால்தான் இன்று இளவரசர் இந்தக் கோட்டைக்குள் அபாயம் இன்றிப் புக முடிந்தது. சக்கரவர்த்தி உயிரோடிருக்கும் போதே அவரைச் சந்திக்கவும் முடிந்தது.....''

''ஆகா! இது என்ன? சக்கரவர்த்தியின்

உயிருக்கு நீயும் கெடு வைக்கிறாய் போலிருக்கிறதே! மூட ஜனங்களும் முட்டாள் ஜோசியர்களும் உளறுவதைக் கேட்டு நீயும் பிதற்றுகிறாயா? அல்லது உனக்கு வேறு ஏதேனும் தெரியுமா?''

''ஜனங்களும் ஜோதிடர்களும் மட்டுந்தானா கெடு வைக்கிறார்கள்? தங்கள் தமையனார் சொல்லி அனுப்பிய செய்தியைச் சற்று முன் கேட்டீர்களே?''

''அது உண்மை என்பது என்ன நிச்சயம்?'' என்றார் காலாந்தக கண்டர்.

''தளபதி! கொடும்பாளூர் இளவரசி எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்?''

''யார் கண்டது? அடுத்தாற் போல் சிங்காதனம் ஏறிப் பட்ட மகிஷியாகும் ஆசையிருக்கலாம்.....''

''தளபதி! நானும் அப்படித்தான் எண்ணியிருந்தேன். இளவரசி இன்று காலையில் செய்த சபதத்தைக் கேட்ட பிறகு என் எண்ணத்தை மாற்றிக் கொண்டேன்'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! ஒருவேளை உனக்கே அத்தகைய ஆசை இருக்கிறதா, என்ன?'' என்று கேட்டுவிட்டுச் சின்னப் பழுவேட்டரையர் இலேசாக நகைத்தார்.

''தளபதி! உண்மையில் நான் பைத்தியக்காரிதான்! தங்களிடம் பேச நின்றேன் அல்லவா?'' என்று கூறிவிட்டுப் பூங்குழலி திரும்பிப்போக யத்தனித்தாள்.

கா லாந்தக கண்டரிடம் உடனே ஒரு மாறுதல் காணப்பட்டது.

''பெண்ணே! கோபித்துக் கொள்ளாதே! நீ சொல்ல வந்ததைச் சொல்லி விட்டுப் போ!'' என்றார்.

பூங்குழலி மறுபடியும் திரும்பி, ''ஆம்; சொல்லத்தான் வேண்டும். இல்லாவிடில் பின்னால் நானும் வருத்தப்படுவேன்; தாங்களும் வருந்தும்படி நேரிடும். ஐயா! சக்கரவர்த்தியின் உயிருக்கு ஏதாவது அபாயம் நேர்ந்தால் நாடு நகரமெல்லாம் தங்கள் பேரில்தான் பழி சொல்லும். தங்களுடைய வீரர்களே கூடச் சொல்லுவார்கள்!'' என்றாள்.

சின்னப் பழுவேட்டரையரின் முகம் சுருங்கிற்று. ''அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால் மற்றவர்கள் பழி சொல்லும் வரையில் காத்திருக்க மாட்டேன். பழிச்சொல் காதில் விழுவதற்குள்ளே என் உயிர் பிரிந்து விடும்! இந்த வேளைக்காரப் படையினர் துர்க்கா பரமேசுவரி கோவிலில் சத்தியம் செய்தபோது, எல்லாருக்கும் முதலில் சத்தியம் செய்து வழி காட்டியவன் நான்!'' என்றார்.

''அதில் என்ன பயன்? சோழ ராஜ்யம் சக்கரவர்த்தியையும் இழந்து ஒரு மகா வீரரையும் இழந்து விடும்! அதைக்காட்டிலும் முன் ஜாக்கிரதையாக இருப்பது நல்லதல்லவா?''

''பெண்ணே! நான் முன் ஜாக்கிரதையாக இல்லை என்றா சொல்லுகிறாய்? இதோ இந்த அரண்மனையைச் சுற்றி இவ்வளவு வீரர்கள் கண் கொட்டாமல் நின்று காத்து வருகிறார்களே! எதற்காக? முதன் மந்திரி அநிருத்தர்கூட நான் அறியாமல் அரண்மனைக்குள்ளே போக முடியாது! தெரியுமா?''

''தெரியும், தளபதி! ஆனால் அரண்மனைக்குள்ளே இருந்தும் அபாயம் வரலாம் அல்லவா?''

''என்ன பிதற்றல்? அரண்மனைப் பெண்கள் சக்கரவர்த்திக்கு விஷங் கொடுத்துக் கொன்று விடுவார்கள் என்று சொல்லுகிறாயா? .... அல்லது ஒருவேளை இப்போது இளவரசருடன் உள்ளே போனாளே, அந்தக் கொடும்பாளூர்ப் பெண்ணின் பேரில் சந்தேகப் படுகிறாயா?'' என்றார்.

''தெய்வமே! அந்தச் சாதுப் பெண்ணின் பேரில் சந்தேகப்படுகிறவர்களுக்கு நல்ல கதி கிடைக்காது. அவளுக்கு அவ்வளவு சாமர்த்தியமும் இல்லை. ஐயா! இந்த அரண்மனைக்குள் வருவதற்குச் சுரங்கப் பாதை ஒன்று இருக்கிறதல்லவா? ......''

சின்னப் பழுவேட்டரையர் திடுக்கிட்டு, ''பெண்ணே! அதைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? எப்படித் தெரியும்? மூன்று நாலு பேரைத் தவிர அந்தப் பாதையைப் பற்றி யாருக்கும் தெரியாதே? தெரிந்தவர்கள் உயிரோடு திரும்பிப் போக முடியாதே?'' என்று பரபரப்புடன் கேட்டார்.

''தளபதி! அதைப் பற்றி இன்று அதிகாலையிலே தான் நான் தெரிந்து கொண்டேன். அங்கே கையில் கூரிய எறி வேலுடன் பாண்டிய நாட்டுச் சதிகாரன் ஒருவன் ஒளிந்து கொண்டிருப்பதையும் பார்த்தேன்......''

''கடவுளே! இது என்ன பயங்கரமான வார்த்தைசொல்லுகிறாய்? அந்தப்பாதை.... அந்தப் பாதை.... எங்கே போய் முடிகிறது என்று தெரியுமா?''

''பொக்கிஷ நிலவறை வழியாகப் போகிறது!'' என்றாள் பூங்குழலி.

''ஆகா! நீ சொல்வது உண்மையாக இருக்கலாம். மனிதப் பெண் உருக்கொண்ட அந்த மாய மோகினியின் வேலைதான் இது! என் தமையனை அடிமை கொண்ட

பெண் பேயின் வேலைதான் இது. ஐயோ! எத்தனை தடவை நான் எச்சரித்தேன்? பெண்ணே! நீ சொல்வது சத்தியமா? நீயே பார்த்தாயா? அந்தப் பாதை இருக்கு மிடம் உனக்கு எப்படித் தெரிந்தது?.....''

''என் அத்தை இன்று காலையில் அழைத்துப் போனபோது தெரிந்தது....''

''அவள் யார் உன் அத்தை? ''

''முதன் மந்திரியின் கட்டளையின் பேரில் தாங்கள் அனுப்பிய பல்லக்கில் கோடிக் கரையிலிருந்து கொண்டு வரப்பட்டவள் தான், ஐயா! நாம் இதைப் பற்றி மேலும் இங்கே பேசிக் கொண்டேயிருக்கும் போது.....''

''உண்மைதான்! நான் உடனே பெரிய பழுவூர் அரண்மனைக்குப் போய் வேண்டிய ஏற்பாடு செய்து விட்டு வருகிறேன். அதற்குள் நீ.....''

''நான் இந்தப் பக்கத்து முனையில் நின்று பார்த்துக் கொள்கிறேன்....''

''ஆகா! உன்னை நான் எப்படி நம்புவது? நீ அந்தப் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்கு உடந்தையானவள் இல்லை என்பது என்ன நிச்சயம்? என்னைப் போக்குக் காட்டி ஏமாற்றிவிட்டு......''

''தளபதி அப்படியானால் என்னுடன் தாங்களும் வாருங்கள்! ஒரு தீவர்த்தி எடுத்துக் கொண்டு வாருங்கள்! இரண்டு பேருமாகப் போய்ப் பார்ப்போம்! போகும் போது எனக்குத் தெரிந்த மற்ற விவரங்களையும் சொல்கிறேன்...''

சின்னப் பழுவேட்டரையர் உடனே வாசற்பக்கம் சென்ற தமது வீரர்களில் சிலரை அழைத்து அவர்களிடம் ஏதோ சொன்னார். அவர்கள் பழுவூர் அரண்மனைக்குப் போகிறார்கள் என்று பூங்குழலி ஊகித்துக் கொண்டாள். வீரர்களில் ஒருவன் கையில் பிடித்திருந்த தீவர்த்தியைக் கோட்டைத் தளபதி வாங்கிக் கொண்டு வந்தார்.

''பெண்ணே! வழிகாட்டிச் செல்! சொன்னதெல்லாம் உண்மைதானா என்று பார்த்துவிடுகிறேன்'' என்றார் காலாந்தக கண்டர்.

அப்போதும் அவர் மனத்தில் பூங்குழலி



யைப் பற்றிச் சந்தேகம் தீரவில்லை. இந்தப் பெண் பொய்யும் புனைசுருட்டும் சொல்லித் தன்னை ஏமாற்றப் பார்க்கிறாளோ, என்னமோ? சுரங்கப் பாதையைப் பற்றித் தன் மூலமாக அறிந்து கொள்ள விரும்புகிறாளோ, என்னமோ? அதன் வழியாகக் கொடும்பாளூர் ஆட்களைக் கோட்டைக்குள் விடுவதற்கு இது ஒரு சூழ்ச்சியோ, என்னமோ!.... அப்படியெல்லாம் தன்னை எளிதில் ஏமாற்றிவிட முடியாது. இவள் அத்தகைய உத்தேசத்துடன் தன்னை அழைத்துப் போனால் இவளுக்குச் சரியான தண்டனை விதிக்க வேண்டும். பெரிய பழுவேட்டரையரைப் போல் நான் கூட ஏமாந்து விடுவேனா, என்ன? எல்லாவற்றுக்கும் இவள் முன்னால் போகட்டும். சுரங்கப் பாதை இவளுக்குத் தெரியும் என்பது உண்மைதானா என்று முதலில் தெரிந்து கொள்ளலாம். பிறகு அங்கே சதிகாரர்கள் ஒளிந்திருப்பது உண்மைதானா என்று அறியலாம். அது உண்மையாயிருந்தால், கடவுளே! எத்தகைய ஆபத்து! நல்ல வேளையாக அதைத் தடுப்பதில் கஷ்டம் ஒன்றுமில்லை. பொந்தில் ஒளிந்திருக்கும் நரியைப் பிடிப்பது போல் பிடித்துக் கொன்றுவிடலாம்!.....

இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டு சின்னப் பழுவேட்டரையர் பூங்குழலிக்குப் பின்னால் நடந்தார். அவளுடைய நடையில் இருந்த வேகத்தைக் குறித்து அதிசயப்பட்டார்.

ஆம்; பூங்குழலியின் உள்ளப் பரபரப்பு அப்போது உச்சி நிலையை அடைந்திருந்தது. அதற்குத் தகுந்தாற்போல் அவளுடைய நடையும் துரிதமாயிருந்தது.



ங்குழலியின் வாழ்க்கையில் சில காலமாகவே அபூர்வமான சம்பவங்கள் நடந்து கொண்டிருந்தன. ஆனால் அன்றைக்கு நிகழ்ந்தவை போல் அதற்கு முன் என்றும் நடந்ததில்லை.

அதிகாலையில் அவளைத் தூக்கத்திலிருந்து அத்தை தொட்டு எழுப்பினாள். அவர்கள் படுத்திருந்த அந்தப்புரத்தின் மேல் மச்சுப் பலகணியில் கோரமான முகம் ஒன்று

தெரிந்தது. உடனே அது மறைந்தது. மந்தாகினி சத்தம் செய்யாமல் எழுந்து பூங்குழலியையும் அழைத்துக் கொண்டு மூடிக் கிடந்த சிற்ப மண்டபத்துக்குள்ளே சென்றாள். மேல் மச்சுப் பலகணியில் பார்த்த அதே பயங்கரமான முகம் இராவணனுடைய தலைகளுக்கும் அவன் கைகளினால் தாங்கிக் கொண்டிருந்த கைலையங்கிரிக்கும் நடுவில் ஒரு கணம் தெரிந்து மறைந்தது.

இருவரும் அச் சிலையின் அருகில், சென்று பார்த்தார்கள். இராவணன் தலைகளுக்கு இடையே சுரங்க வழி ஒன்று ஆரம்பமாகிச் செல்கிறது என்று பூங்குழலி அறிந்தாள். மந்தாகினி முதலிலும் பூங்குழலி அவளைத் தொடர்ந்தும் அச் சுரங்கப் பாதையில் இறங்கிச் சென்றார்கள். பூங்குழலிக்கு முதலில் கண்ணே தெரியவில்லை. அத்தகைய அந்தகாரம் சுரங்கப் பாதையில் குடி கொண்டிருந்தது. அத்தையின் கையைப் பிடித்துக் கொண்டு தட்டுத் தடுமாறித்தான் போனாள். பாதையிலிருந்து சில படிகள் ஏறி ஒரு மண்டபத்துக்குள் இருவரும் வந்து விட்டதாகத் தோன்றியது. அங்கேயும் இருளடர்ந்து தானிருந்தது. கையினால் தடவிப் பார்த்துக் கொண்டு தூண்களிலும் சுவர்களிலும் முட்டிக் கொள்ளாமல் போவதே கஷ்டமாயிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் மேலே எங்கிருந்தோ சிறிய பலகணிகளின் வழியாகச் சொற்ப வெளிச்சம் வரத் தொடங்கியது. பொழுது நன்றாய்ப் புலர்ந்திருக்க வேண்டும் என்று பூங்குழலி ஊகித்தாள். அத்துடன் அவர்கள் சுற்றி அலைந்து கொண்டிருப்பது பொக்கிஷ நிலவறை என்பதையும் தெரிந்து கொண்டாள். ஆனால் மந்தாகினி அத்தை எந்த மனிதனைத் தேடிக் கொண்டு வந்தாளோ, அவன் அகப்படுவான் என்று தோன்றவில்லை. இருள் சூழ்ந்த அந்த நிலவறையில் ஒளிந்து கொள்வதற்கு எத்தனையோ இடங்கள். அவன் எங்கே ஒளிந்திருக்கிறானோ, என்னமோ? நாம் அவனைக் கண்டு பிடிப்பதற்கு முன்னால், அவன் நம்மைக் கண்டு பிடித்துப் பின்புறமாக வந்து குத்திக் கொன்றாலும் கொன்று விடலாம்; இந்த நிலவறையில் கேள்வி முறை ஒன்றும் இராது.

பூங்குழலி இப்படி எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது, மந்தாகினி அவளுடைய அபூர்வமான குரலில் — மானிடக் குரல் என்றோ,, பிராணியின் குரல் என்றோ கண்டு பிடிக்க முடியாத குரலில், — கூச்சலிட்டாள். அதைத் தொடர்ந்து பீதி நிறைந்த ஒரு மனிதக் குரல் ஓலமிட்டது. நிழல் போன்ற உருவம் ஒன்று தட தட வென்று ஓடியது. பலகணியில் முகத்தைக் காட்டிய மனிதனாகத் தான் இருக்க வேண்டும் என்று பூங்குழலி தீர்மானித்துக் கொண்டாள். அத்தையின் குரலைக் கேட்டு அவன் பேயோ, பிசாசோ என்று பயந்து ஓடுகிறான் என்று பூங்குழலி அறிந்தாள். இந்த எண்ணம் அவளுக்குச் சிரிப்பை உண்டாக்கியது. சிறிது நேரத்துக்கு ஒரு முறை மீண்டும் மீண்டும் மந்தாகினி அத்தை அம்மாதிரி குரல் கொடுத்து அம்மனிதனை அங்குமிங்கும் தெறி கெட்டு ஓடி அலையும்படி செய்தாள். கடைசியாக அவன் ஓடிப்போய் மரக்கதவு ஒன்றில் மோதிக் கொண்டான். பிறகு, அக் கதவைத் தட தட வென்று தட்டினான். விட்டு விட்டு நாலைந்து தடவை தட்டினான். பின்னர் கதவு திறந்தது. திறந்த இடத்தில் பெண் ஒருத்தி நிற்பது தெரிந்தது. அவளிடம் அம் மனிதன் ஏதோ கூறினான். அந்தப் பெண் சிறிது தயங்கியதாகவும், அம் மனிதன் அவளைப் பயமுறுத்தியதாகவும் தோன்றியது. பிறகு அவள் திரும்பிப் போனாள். மனிதன் கதவினருகிலேயே நின்று எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பெண் கையில் ஒரு விளக்குடன் வந்து சேர்ந்தாள். இருவரும் நிலவறைக்குள் நுழைந்தார்கள். மந்தாகினி பூங்குழலியையும் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ஒரு பெரிய தூணின் மறைவில் நின்று கொண்டாள். விளக்கு வெளிச்சத்தில் அந்த மனிதனுடைய முகத் தோற்றத்தை அவர்கள் நன்றாகப் பார்த்துக் கொண்டார்கள்.

அந்த மனிதனும் விளக்குக் கொண்டு வந்த பெண்ணும் நிலவறையின் உட் பகுதிக்குச் சென்றார்கள்.

"பேயாவது? பிசாசாவது? நன்றாகப் பீதி அடைந்து போயிருக்கிறாய்! இவ்வளவு பயந்தவன் இந்தமாதிரி காரியத்துக்கு ஏன் வரவேண்டும்?" என்று அந்தப் பெண் கேட்டது பூங்குழலியின் காதில் நன்றாக விழுந்தது. 'எந்த மாதிரி காரியம்' என்பது அவ்வளவு நன்றாகப் பூங்குழலிக்கு விளங்கவில்லை.

நிலவறைக்குள்ளே விளக்குடன் அவர்கள் மறைந்ததும் மந்தாகினி பூங்குழலியைக் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டு போய்த் திறந்திருந்த கதவின் வழியாக வெளியேறினாள். நடை பாதையைக் குறுக்கே நடந்து கடந்து ஒரு பெரிய தோட்டத்துக்குள் அவர்கள் பிரவேசித்தார்கள். அங்கே ஏகாந்தமான ஓரிடத்தில் மந்தாகினி பூங்குழலியிடம் தான் சொல்ல வேண்டியதைச் சமிக்ஞை பாஷையினால் தெரிவித்தாள். "என்னுடைய அந்தியகாலம் நெருங்கி விட்டது. நான் கடைசியாகக் கண்ணை மூடுவதற்குள்ளே இளவரசனை ஒரு முறை பார்க்க வேண்டும். நீ போய் இச் செய்தியைச் சொல்லி அவனைக் கையோடு அழைத்து வரவேண்டும்" என்பதுதான் அச்செய்தி.



ங்குழலி அவளுடைய அத்தையிடம் கொண்டிருந்த அன்பு நாம் நன்கு அறிந்ததே. அம்மாதிரி சமயத்தில் அவளை விட்டுவிட்டுப் போகவும் பூங்குழலிக்கு மனம் வரவில்லை; அவள் வார்த்தையைத் தட்டவும் இயலவில்லை. எனினும், அதே சமயத்தில் பொன்னியின் செல்வரைப் பார்ப்பதற்கு இது ஒரு சந்தர்ப்பம் என்னும் எண்ணம் அவளை உடனே முடிவுக்கு வரும்படி செய்தது. அத்தையிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றாள். தோட்டத்தின் மதிள் ஏறிக் குதித்து அப்பால் சென்று தஞ்சை நகரின் கோட்டை வாசலையும் கடந்தாள். அங்கே ஆழ்வார்க்கடியானைச் சந்தித்தாள். அவனும் முதன் மந்திரியின் ஆக்ஞையினால் பொன்னியின் செல்வரைப் பார்ப்பதற்கே போவதாக அறிந்தாள். அந்த வீர வைஷ்ணவனுடைய உதவியினால் அவளுடைய பிரயாணமும் சௌகரியமாக நடந்தது.

அன்றைக்கு அதிர்ஷ்டம் நெடுகிலும் அவள் பக்கம் இருந்தது. குடந்தை ஜோதிடர் வீட்டின் வாசலில் இளையபிராட்டியின் ரதத்தை அவர்கள் கண்டார்கள். இளவரசரைப் பற்றிக் குந்தவை தேவிக்கு ஏதேனும்செய்திதெரிந்திருக்கலாம்என்றுஎண்ணி விசாரிப்பதற்காக ஜோதிடர் வீட்டில் நுழைந்தார்கள். அங்கே பெரிய பழுவேட்டரையரின் வாய்மொழியினால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றி அறிய நேர்ந்தது. பொக்கிஷ நிலவறையில் ஒளிந்திருந்தவன் அந்தச் சதிகாரர்களில் ஒருவன் தான் என்பதைப் பூங்குழலி நிச்சயித்துக் கொண்டாள். அதே சமயத்தில், இளவரசருக்கும் சதிகாரர்களினால் அபாயம் ஏற்படலாம் என்று அறிந்த அவள் உள்ளம் வேதனைப்பட்டது. வானதி செய்த சபதம் அந்த வேதனைக்கு ஒரு பரிகாரமாயிருந்தது. இளவரசி வானதியைக் காப்பாற்றப் போன இடத்தில் இளவரசரையும் சந்திக்கலாயிற்று.

எல்லாவற்றையும் விட அவளுக்குத் திருப்தி அளித்த காரியம், தஞ்சாவூருக்குப் போவது பற்றி அவளுடைய யோசனையை இளவரசர் ஏற்றுக் கொண்டதுதான். இலங்கையில் தம்மைத் தெரியப்படுத்திக் கொள்ளாமல் யானைப்பாகனைப் போல் அவர் யாத்திரை செய்ததுண்டு என்பதை அவள் அறிந்திருந்தாள். அங்கே சேநாதிபதியையும் படை வீரர்களையும் அவர் பிரிந்து தன்னை மட்டும் யானை மேல் ஏற்றிக் கொண்டு கடற்கரைக்கு விரைந்து வந்ததையும் அவள் மறந்து விடவில்லை. எனவே, இச் சமயமும், இளவரசர் அதே முறையைக் கடைப்பிடித்தால் நல்லது என்றும், அவர் தனியாகப் போனால் தஞ்சைக் கோட்டைக்குள் போக இயலாது என்றும், தன்னையும் வானதியையும் அழைத்துப் போனால் யானைப்பாகன் என்று எண்ணி விட்டு விடுவார்கள் என்றும் சொன்னாள்.

"சமுத்திர குமாரி! நல்ல யோசனை சொன்னாய்! ஒரு பெரிய ராஜ்யத்துக்கு முதன் மந்திரியாக இருக்க நீ தகுந்தவள்!" என்று இளவரசர் கூறிய மொழிகளை நினைத்து நினைத்து அவள் உள்ளம் பூரித்தது.

ஆனால், இவ்விதம் அந்த நிமிஷம் வரையில் அவள் நினைத்தபடியே எல்லாம் நடந்திருந்தும் என்ன உபயோகம்? அவள் எதிர்பார்த்தபடி மந்தாகினி அத்தை சக்கரவர்த்தி படுத்திருந்த அறையில் இல்லை! அவளைப் பற்றி அங்கே யாரிடமும் விசாரிக்கவும் கூடவில்லை. "என்னுடைய இறுதிக்காலம் நெருங்கி விட்டது" என்று அத்தை சமிக்ஞையினால் அறிவித்ததை எண்ணியபோதெல்லாம் பூங்குழலியின் நெஞ்சு பகீர் என்றது. இவ்வளவு சிரமம் எடுத்துச் சாதுர்யமாகப் பேசி இளவரசரை இங்கே அழைத்து வந்திருந்தும் என்ன பயன்? அத்தையைக் காணவில்லையே என்று அவள் நெஞ்சு துடிதுடித்தது. நிலவறையிலேயே இன்னும் இருக்கிறாளோ என்று தோன்றியது. ஒருவேளை அந்தப் பாதகச் சதிகாரனால் அங்கேயே கொல்லப் பட்டிருப்பாளோ என்று எண்ணிய போது அவள் நெஞ்சு பிளந்தே போயிற்று.

சுரங்கப்பாதை வழியாக நிலவறைக்குள் போய்ப் பார்க்க விரும்பினாள். ஆனால் அரண்மனையில் அப்போது இளவரசரின் வரவு காரணமாக ஒரே கோலாகலமாயிருந்தது. குறுக்கும் நெடுக்குமாகப் பெண்கள் போவதும் வருவதுமாயிருந்தார்கள். கூட்டம் கூட்டமாக வந்து சக்கரவர்த்தி படுத்திருந்த அறையை எட்டிப் பார்த்து விட்டுப் போன வண்ணமிருந்தார்கள். இதற்கிடையில் தான் மட்டும் அந்தப் பழைய சிற்ப மண்டபத்துக்குத் தனியாகப் போவதை யாராவது பார்த்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்? அந்தச் சதிகாரன் ஒருவேளை இன்னமும் அங்கே இருந்தால், தான் அவனிடம் தனியாகப் போய் அகப்பட்டுக் கொள்வதும் உசிதமல்ல. எத்தனையோ நெஞ்சத் துணிவுள்ள பூங்குழலிக்கும் அந்த இருளடர்ந்த பொக்கிஷ நிலவறை சிறிது பயத்தை அளித்தது.

ஆகையினாலேயே சின்னப் பழுவேட்டரையரிடம் சொல்லி அவரையும் அழைத்துக் கொண்டு போய் நிலவறையில் தேடிப் பார்க்கத் தீர்மானித்தாள்.

காலாந்தக கண்டரோடு வாதம் செய்து அவர் மனத்தைத் திருப்பி அழைத்துப் போவதற்குச் சிறிது அவகாசம் ஆகி



அருள்வாக்கு

ஆசாரியர்களின் உயரிய நூல்களில் ஒன்று பஜகோவிந்தம். பக்தி இல்லையென்றால் அறிவினால் பயன் இல்லை என்றும் எனவே கல்வியின் லட்சியம் ஈஸ்வர பக்தியை வளர்ப்பதுவே என்றும் ஆசாரியர் அந்த ஸ்துதியால் உணர்த்துகிறார்.

மற்ற எதற்கும் நேரமில்லாத அளவுக்கு மக்கள் சதாசர்வ காலமும் உலகியல் கஷ்ட காலங்களினால் அவதிப்படுகின்றனர். இந்தக் கஷ்டங்கள் சொப்பன நிலையிலும் சென்று துன்புறுத்துகின்றன. ஒருவனது உத்தியோகம் அல்லது கல்வி நிலை எதுவாக இருந்தாலும் ஒவ்வொருவரும் கடவுள் தியானத்திற்குச் சிறிது நேரம் ஒதுக்கி வைக்க வேண்டும். இதனால் மன அழுக்கு நீங்க வழிபிறக்கும். ஒவ்வொரு நாளும் சேரும் அழுக்குகளை அன்றாடம் நீராடுவதால் நீக்குவதைப் போல, 'பஜ கோவிந்தம்' என்ற நீராட்டத்தினால் மனத்தைப் புனிதமாக்க வேண்டும் என்று சொல்கிறார் மகாகவி ஆசார்யார். அவர் வெறும் கவி மட்டுமில்லை. அருளும் நிறைந்தவர். ஆகவே அருட்கவியாவார். ஆசார்யரவர்களின் தரிசனத்தால் உலகம் க்ஷேமம் அடையும். அவரைத் தரிசனம் பண்ணும் பாக்கியம் உலக மக்களுக்கு முப்பத்திரண்டு வருஷங்கள்தான் கிடைத்தது. ஆனால் உலகம் உள்ள வரையில் அழியாத சிறந்த கவிதைகளை அவர் இயற்றியதன் மூலம் என்றும் தம்முடைய உருவம் மக்களின் மனக்கண் முன் நிலைபெறச் செய்து விட்டார். அவருடைய கவிதைகளை எல்லோரும் படிக்க வேண்டும். கேட்க வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

விட்டது. அதை நினைத்துத்தான் அவள் இப்போது மிக விரைவாக நடந்தாள். விரைவில் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று அவளுடைய உள்ளுணர்ச்சி கூறியது. அதனால் தனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால் பாதகமில்லை. அத்தைக்கு ஒன்றும் நேரக்கூடாதென்று மனப்பூர்வமாக விரும்பினாள்.

சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசிக்கும் சமயத்தில், அரண்மனை மாடத்திலிருந்து ஏதோ கரிய நிழல் விழுவது போலிருந்தது; சுவர் ஓரமாக ஓர் உருவம் போவது போலவுமிருந்தது. அவை உண்மையா அல்லது பிரமையா என்று பார்த்துத் தெளிவதற்காகச் சற்று நின்றாள்.

''பெண்ணே! ஏன் நிற்கிறாய்? பொய் வெளிப்பட்டு விடுமே என்று பயப்படுகிறாயா?'' என்று சின்னப் பழுவேட்டரையர் கூறியது காதில் விழுந்ததும், மேலே விரைந்து நடந்தாள்.

சிற்ப மண்டபத்துக்குள் சென்றதும் இராவணன் தலைகளுக்கும் கைலையங்கிரிக்கும் நடுவில் இருந்த துவார வாசலைப் பூங்குழலி சின்னப் பழுவேட்டரையருக்குச் சுட்டிக் காட்டினாள்.

''சரிதான்! இறங்கு முதலில்!'' என்றார் கோட்டைத் தளபதி.

ஏனோ பூங்குழலிக்குத் தயக்கம் உண்டாயிற்று. அவள் உடம்பு நடுங்கிற்று.

அதே சமயத்தில் 'கிறீச்' என்று அமானுஷிகமான குரல் ஒன்று ஓலமிடும் சத்தம் கேட்டது.

அது தன்னுடைய அத்தை மந்தாகினியின் குரல் என்பதை உடனே உணர்ந்து கொண்டாள். அந்த ஓலக்குரல் அரண்மனைக்குள்ளே சக்கரவர்த்தி படுத்திருக்கும் அறையிலிருந்து வருகிறது என்பதையும் அறிந்தாள்.

உடனே அவளுடைய தயக்கம் தீர்ந்துவிட்டது. சின்னப் பழுவேட்டரையரைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அரண்மனை அந்தப்புரத்தை நோக்கி விரைந்து ஓடினாள். மீண்டும் மீண்டும் அந்தப் பயங்கர ஓலக்குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது.

சக்கரவர்த்தி படுத்திருந்த அறைக்குள் அவள் பிரவேசித்த போது, அங்கே தோன்றிய காட்சி அவள் உள்ளத்தில் ஒரு பெரிய சித்திரக் காட்சியைப் போல் பதிந்தது.

சக்கரவர்த்தி சாய்ந்து படுத்த வண்ணம் தமது அருமைக் குமாரன் அருள்மொழியின் கைகளைத் தமது கைகளால் பிடித்துக் கொண்டிருந்தார். அவர்கள் இருவருக்கும் முன்னால் மந்தாகினி அத்தை நின்று ஓலமிட்டாள். ஒரு பக்கத்தில் வானதியும் அவளை மருமகளாகப் பெறுவதற்கிருந்த மலையமான் மகளும் நின்று கொண்டிருந்தார்கள்.

எல்லாரும் வெறி கொண்டவள் போல் கூச்சலிட்ட மந்தாகினியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மேல் மண்டபத்தின் முகப்பிலிருந்து பாய்ந்து வந்த கூரிய வேலை அவர்களில் யாரும் கவனிக்கவில்லை.

பூங்குழலி தன் அத்தையை நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்றாள்.

(தொடரும்)

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

மேலும் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற எனது நீண்ட நாளைய விருப்பம் உங்களது பயிற்சியின் மூலம் நிறைவேறும் என நம்புகிறேன். எனவே முன் கண்ட எனது முகவரிக்கு தீ பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும் விண்ணப்ப மனுவையும் அனுப்புமாறு வேண்டுகிறேன்.

இப்படிக்கு
எம். வளர்மதி
மார்க்கம்பட்டி.




விவேகானந்தா கல்வி நிலையம்
9 மேட்லி ரோடு
தி. நகர்
சென்னை. PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்
9, மேட்லி ரோடு,
தி. நகர், சென்னை - 17.**

NAGA

# சரியான ஜோடி

சபாஷ்! சும்மா வசன விளையாட்டை நம்பிக் கொண்டிருக்காமல் சம்பவ ரீதியாக நகைச்சுவையில் ஓரளவு சஸ்பென்ஸைப் புகுத்தி, விரிந்த உதடு விரிந்தபடியே காட்டிய பற்களைக் காட்டியபடியே இருக்க வைத்து விட்டார்களே!

கதை — திரைக்கதைக்குப் பொறுப்பானவர்களைப் பாராட்ட வேண்டும்.

கதாநாயகன் வேதாசலமாய் வருகிற இயக்குனர் பிரபாகரன் படு — ஃப்ரெஷ். லாரல் — ஹார்டி ஜோடியில் பின்னவரின் உடன்பிறப்புப் போல் என்ன ஓர் இது? கோமசுவர மனைவியின் கொடுமை தாளாமல், அவளை என்ன விதமாய்க் கொலை செய்வது என்று இவர் ஒரு குழப்ப வெறியுடன் திட்டமிட்டுக் கொண்டிருக்க, எங்கிருந்தோ ஒரு போன், 'உன் பெண்டாட்டி எங்கள் கஸ்டடியில் தான் இருக்கிறாள். மரியாதையாய் இரண்டு லட்சத்தை ஒப்படைக்கா விட்டால் உன் மனைவியை உயிரோடு பார்க்க முடியாது.' என்று! ரிசீவரைத் தூக்கிப் போட்டுவிட்டு அவர் ஆடும் ஆட்டம் அமர்க்களம். போன் மிரட்டல் தொடரும் போது, 'நீயெல்லாம் என்னய்யா கடத்தல்காரன்? சொல்லிட்டே இருக்கியே தவிர, செய்யமாட்டேங்கறியே?' என்று சலித்துக் கொள்ளும் அலுப்பு — வெடிச் சிரிப்புத்தான்.

ஜெயதேவி இத்தனை காலம் எங்கே இருந்தார்? அதிகம் அலட்டிக் கொள்ளாவிட்டாலும் சும்மா விழியாலே உருட்டி மிரட்டியே வேடிக்கை பண்ணியிருக்கிறார். தன்னைக் கடத்தி வந்த ஜோடியின் பலவீனத்தை உணர்ந்து கொண்டு, செமை அதிகாரத்துடன் மிரட்டுவதும், உருட்டுவதும் தமாஷ்தான். இருந்தாலும் புருஷனை அவன் இவன் என்று அவர் பேசும் போது அன்னியமாய்ப் போய் ஏதோ மேற்கத்திய மூலத்தைத் தோலுரிக்கிறது!

ஜெயதேவியைக் கடத்தி வரும் பாண்டியராஜன் — ரஞ்சனி ஜோடி பாந்தமான இதம். கணவன் சொல்லுக்குக் கட்டுப்பட்ட அப்பாவி ரஞ்சனி நடுநடுவே நியாயமான சந்தேக ஒடுக்கல்கள் கிளப்ப, பாண்டியராஜன் அடாவடியாய் அவற்றைத் தட்டிச் சரிப்படுத்தும் இடங்களில் அந்த ஏமாளிகளைக் கண்டு ஏளனச் சிரிப்பு வெடிக்கிறது. பாண்டியராஜன் இரண்டாம் கதாநாயகனாகயிருப்பது கவனிக்கத்தக்கது. ரஞ்சனி நிறையப் பிரியத்தை அள்ளிக் கொள்கிறார்.

இதில் டிஸ்கோ சாந்தி வெறும் சாந்திதான். மினி டிரெஸ்ஸில் இருந்தாலும் பேருக்குக் கூட ஒரு டிஸ்கோ வெட்டுக் கிடையாது. குறைந்த முகபாவத்திலேயே நிறைந்த கலகலப்பு! இவருக்குக் காதலனா கணவனா நாஸர்? கலகலப்புக்கு இவரும் கை கொடுக்கிறார்.

எஸ். எஸ். சந்திரன் டி. ஐ. ஜி. வசமான ஆதாரம் கிடைத்து விட்டது என்ற தெம்பில் அவர் வீடியோ கேஸட்டைப் போட்டுப் பார்க்க, அதில் தான் தன் மச்சினியோடு ஜாலியாய் இருந்த அந்தரங்கங்கள் வெளிச்சம் போட்டுக் குதிக்க — அவர் திக்கித் திணறித் திண்டாடுவது கொண்டாட்டச் சிரிப்பு.

கோவை சரளாவுக்கு டபுள் ரோல். மச்சினி சரளா கொஞ்சம் கூடுதலாய்க் கிச்சுக் கிச்சு மூட்டுகிறார்.

இந்த ஹாஸ்ய விருந்துக்கு சைடு டிஷ்கள் சரியாய் அமையாதது ஒரு மைனஸ் பாயிண்ட். குறிப்பாய் இசை. காமெரா துல்லியம்தான். ஆனால் போட்டோ ஸ்டுடியோ படம் மாதிரி. ஆர்ட் வேணும்.

அபத்தப் பொருத்தங்களை ஹாஸ்ய உணர்வோடு அங்கீகரித்துக் கொள்ளும் பக்குவம் பெற்றவர்கள் அதிகம் ரசிக்கலாம். எச்சரிக்கை: சீரியஸ் சிந்தனையாளர்கள் எரிச்சல்படக்கூடும்.

— பி. எஸ். எஸ்.



# பெண்மை

வக்கீல் வீட்டுக்குப் போகும் போதுதான் தன் கணவனைப் பார்த்தாள் பத்மா.

குதிரை வண்டியில் வந்தவன், எதிரில் பத்மா வந்ததைப் பார்க்கவில்லை.

அவன் பார்ப்பானோ என்ற நப்பாசையில் வண்டி தெருமுனை திரும்பும் வரையில் நின்றிருந்தாள்.

"ம்ஹூம்! அவன் பார்க்கவில்லை! ரொம்ப மும்முரமாய் உள்ளே யாருடனோ பேசிக் கொண்டிருந்தவன் தலையைத் திருப்பவே இல்லை.

அடையாளம் தெரிந்திருக்காது. பத்து வருடங்களுக்கு மேலாகி விட்டது. அப்படியே தெரிந்தாலும் அந்த மலாய்க்காரி இருக்கும்போது எப்படிப் பார்ப்பார்! பார்க்கணும்னு என்ன அவசியம்?



## போட்டிக் கதை — 4

# ஜி.ஏ. பிரபா

எல்லாப் பந்தமும் ஆற்று நீரில் அடித்துப் போன இலைச்சருகு மாதிரி போய்விட்டது. வெம்புவதாலோ, பொருமுவதாலோ என்ன பயன்?

வக்கீல் வீட்டுக்குப் போன போது நாழியாகிவிட்டது. வக்கீல் மாமியே மாவு இடித்துக் கொண்டிருந்தாள்.

"நகருங்கோ மாமி. நான் இடிக்கிறேன்."

"ஒண்ணும் வேணாம்! இன்னும் எங்கெங்கே சுத்தணுமோ சுத்திட்டு வா."

"இப்படி கோவிச்சுக்கலாமா மாமி? நீங்களே கோவிச்சுக்கிட்டா அப்புறம் நான் எங்க போகட்டும்."

"அதிரசத்துக்கு மாவு இடிக்கணும் நாலு மணிக்கு வான்னா அஞ்சு மணிக்கு வரே!"

"நான் நாலுமணிக்கே வந்துட்டேன் மாமி, வர்றவழில எங்க வீட்டுக்காரரைப் பார்த்தேன். அதான் நாழி."

"பலராமனைப் பார்த்தியா?" மாமி டக்கென்று உலக்கையை மாற்றினாள் அவளிடம். நகர்ந்து தூணில் சரிந்து உட்கார்ந்தாள்.

"பார்த்தானா? பேசினானா?"

"இல்லை!"

"நேராவே போய்ட்டானா? கண்டுக்கவே இல்லையா?"

"கண்டுக்கணும்னு என்ன சட்டம் மாமி, பத்து வருஷமா இருக்கியா செத்தியான்னு கேக்காதவரா இப்ப கண்டுக்கப் போறார்? ஆற்றாமை குரலில் வழிந்து உலக்கையில் வெளிப்பட்டது.

"என்னவோ இனியாச்சும் பகவான் கண் திறந்தா சரி," என்றாள் மாமி.

பத்மாவுக்கும் அந்த நம்பிக்கைதான்! அவர் தன்னை இனிமேலயானும் ஏற்றுக் கொள்ள மாட்டாரா? 'அவரின் அத்தனை துரோகங்களையும் நான் மறக்கத் தயார்' என்று தனக்குள்ளேயே கூறிக் கொண்டாள். தனிமைத் தவத்தில் இத்தனை நாள் கிடந்தது போதும். ஒருவேளை சோற்றுக்குக் கேவலமாய்க் கெஞ்சி, வேலை செய்து, பல்லைக் காட்டிப் பிழைத்தது போதும், இனியாவது விடியாதா?

விடியும் என்று நம்பிக்கையில் வேகமாய் இடித்து முடித்தாள். மாமி அஞ்சுபடி மாவுக்கு கணக்கு போட்டு மூன்று ரூபாய் கொடுத்தாள்.

"போய்ட்டு வா. வந்தான்னா சமத்தா நடந்துகோ. அசட்டு பிசட்டுன்னு எதையாவது கேட்டு வக்காதே! என்ன செய்யறது சொல்லு. பொம்மனாட்டி ஜென்மம். கஷ்டப்படறதுக்குன்னே இருக்கு." அறிவுறை கூறினாள்.

தலையாட்டிவிட்டு வெளியேறினாள் பத்மா. கால்களை விட மனம் பறந்தது. வாசலில் அவர் நிற்பாரோ என்று மனம் சந்தோஷித்தது.

'ச்சீ நான் ஏன் இப்படி வேண்டாத கற்பனைகளை வளர்த்துக் கொள்கிறேன்.' — தனக்குத்தானோ குட்டிக் கொண்டாள். அவளை மீறிப் பழைய நினைவுகள் பீறிட்டெழுந்தன.

எல்லாம் இதே ஊரில் தான் நடந்தது. இதே தெருவில் தான் பலமுறை பலராமனுடன் சினிமாவுக்கு, கோவிலுக்கு என்று போயிருக்கிறாள். அதெல்லாம் ஒரு காலம். பலராமன் வேலை முடிந்து வருவதற்குள் தன் வேலைகளை எல்லாம் முடித்துவிட்டுக் காத்திருப்பாள். வந்ததும் குளிப்பான். காப்பி, டிபன், பிறகு ஊர்வலம் தான். அவர்களின் சந்தோஷம், குடித்தனம் பார்த்து அக்கம் பக்கமே கண்வைத்தது.

சிங்கப்பூருக்கு வேலைக்குப் போன போது அழுத பலராமனைப் பத்மாதான் சமாதானப்படுத்தினாள்.

எத்தனை நாள் தான் வேலை இல்லாமல் உள்ளூரில் குப்பை கொட்டுவது! அவனுக்குத் தெரிந்தவர் சிங்கப்பூரில் தன் தொழிலுக்கு உதவியாகக் கூப்பிடவே உறவுக் கூட்டம் அத்தனையும் அவனை உலுக்கி, அனுப்பி வைத்துவிட்டது.

கல்யாணமான ஆறாம் மாதம் கிளம்பினவன் ஒரு வருஷம் கழித்து வந்தான். சொந்தத்திலேயே தொழில் செய்யப்போகிறேன் என்று இவள் நகை எல்லாம் விற்றுப் பணம் வாங்கிக்கொண்டு, உருகிவிட்டுப் போனவன் தான்.....

அதன் பிறகு இன்றுதான் பார்க்கிறாள்.

ஆரம்பத்தில் வந்த கடிதங்கள் பிறகு நின்று போயின. அவன் அங்கேயே வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட விவரத்தைச் சொன்ன கடிதம் தான் அவளுக்கு வந்த கடைசி லெட்டர்.

அதன்பிறகு அவளுக்கு மாமியார் வீட்டில் மதிப்பு குறைந்தது. மகனே உதறியபிறகு தங்களுக்கு மட்டும் அவள் எதற்கு? அவள் வெளியேற்றப்பட்டாள். அப்பா இந்த வேதனையில் இறந்துவிட, அம்மாவும் அதே அதிர்ச்சியில் தூக்கில் தொங்க, அண்ணா தன் மனைவி சொல்லை மட்டுமே கேட்பது என்ற முடிவுக்கு வந்திருந்தான்.

நடுத்தெருவில் நின்ற அவளுக்கு ஆதரவு தந்தது வக்கீல் மாமி போன்ற ஒரு சிலர் தான்.

ஆனாலும் அவள் காத்திருக்கிறாள். 'என்றேனும் ஒரு நாள் தன் தப்பை உணர்ந்து பலராமன் திரும்பி வருவான், தன்னை ஏற்றுக் கொள்வான்' என்று சினிமாக் கதாநாயகி போல் நம்பிக்கையுடன் நடமாடுகிறாள்.

**அ**வள் வீட்டைத் திறந்தாள். திடீர் என்று பலராமன் வந்தால் என்ன செய்வது என்ற யோசனை அவள் மனத்தில் ஓட.

அரக்க பரக்கக் கூட்டிச் சுத்தம் செய்தாள். பக்கத்து வீட்டிலிருந்த ஸ்டூலை வாங்கிக் கொண்டு வந்து போட்டாள்.

''எதுக்கு பத்மா ஸ்டூல்?''

''எங்க வீட்டுக்காரர் வந்திருக்கார்.''

''உன் வீட்டுக்கா?''

''இல்லை ஊருக்கு வந்திருக்கார் இங்கே வந்தாலும் வருவாரேன்னு....''

''அதானே கேட்டேன்! அவளும் வந்திருக்காளா?''

''ம்.''

''நிறையசாமான் கொண்டு வந்திருக்கான் போலிருக்கே.....?''

''தெரியலை.''

''டீ.வி,புடைவை நகை,வாட்சு....ஏயப்பா முத்தம்மா பாத்துட்டு வந்து ஒரே அளப்பு, கெட்டிக்காரன்!''

இந்த 'கெட்டிக்காரன்' எதற்கு? அத்தனை சாமான் கொண்டு வந்ததற்கா? இல்லை இவளை விட்டுப் போனதற்கா? இன்றைக்கு மாய்ந்து, மாய்ந்து சிங்கப்பூர் மகாத்மியம் கேட்கும்இவர்கள், அன்று அவளுக்கு நேர்ந்த அநியாயம் பற்றிக் கேட்டிருக்கலாமே!

அவள் உட்கார்ந்திருந்தாள். செகண்ட் ஷோ முடிந்து கூட்டம் கரையும் வரை வாசலிலேயே காத்திருந்தாள். பலராமன் வரவில்லை. ரெண்டு நாள் வேலையைத் தள்ளி விட்டு பகல் முழுதும் காத்திருந்தாள். வரவில்லை! மழை கொட்டி, நிலா வானத்தில் மறைவதைப் பார்த்துக் கொண்டே வெகுநேரம் நிற்பாள். கண்ணீர் மட்டும் வழிந்து இறங்கும்.

**அ**வள் பொறுமையோ, கண்ணீரோ! மூன்றாம் நாள் விடியற்காலை ஆறு மணிக்கு வீட்டுக்கதவு தட்டப்பட்டது.

''யாரது?''

''நான்தானுங்க சுப்பு.''

பலராமன் வீட்டு ஆள்காரன்!

பரபரப்பாய் எழுந்து கதவைத் திறந்தாள்.

''என்ன சுப்பு?''

''ஐயா வரச் சொன்னாருங்க.''

''எந்த ஐயா?''

''நம்ம சிங்கப்பூர் ஐயாதானுங்க.''

'குப்' பென்று மகிழ்ச்சியில் அடைத்த நெஞ்சை நீவிக் கொண்டாள்.

''என்ன விஷயம் சுப்பு?''

''தெரியலீங்க.''

''சரி போ, வரேன்.''

''கையோடு கூட்டியாரச் சொன்னாருங்க.''

''இதோ ஒரு நிமிஷம்.''

அவசரமாய் முகத்தை கழுவிக் கொண்டாள். பலராமனுக்குப் பிடித்த புடைவையைக் கட்டிக் கொண்டு, அவனுக்குச் செய்திருந்த பலகாரத்தை ஒரு பொட்டலமாய் கட்டிக் கையில் எடுத்துக் கொண்டு, சுப்பு பின்னாடியே ஓடினாள். தன்னுடைய பரபரப்பும், ஆர்வமும் அவளுக்கே வேடிக்கையாய் இருந்தன. ஆனால் பலராமனைத் தவிர அவளுக்கு வேறு ஆதரவு யார்? நல்லவனோ, கெட்டவனோ, அவன் கையில் ஒப்படைத்த தன் வாழ்வை அவனேதான் சீர்படுத்த வேண்டும்.

படபடக்கும் நெஞ்சை அடக்கிக் கொண்டு படி ஏறினாள் பத்மா.

வீடு உள்ளே முழுதாக மாறியிருந்தது. காரை பெயர்ந்த தரைக்கெல்லாம் மொசெய்க் போட்டு, மேலே ஓட்டை மாற்றி டெரஸ் போட்டு, குஷன் சோஃபா, நாற்காலி.....

''சின்ன ஐயா இந்த ரூம்ல இருக்காரு.''

அவள் அந்த ரூமுக்குள் நுழைந்தாள்.

''வா பத்மா.''

வரவேற்ற பலராமன் நிறைய நரைத்திருந்தான். பெருத்திருந்தான். கண்கள் கீழே சதை தொங்கியது. பேசத் தோணாமல் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள் பத்மா.

''சௌக்கியமா?''

''ம்.''

''வந்ததும் உன்னைப் பார்க்கணும்னு நினைச்சேன், முடியலை.''

சம்பிரதாயப் பேச்சாகத் தோன்றியது. பொண்டாட்டியைப் பார்க்கக் கூட முடியாமல் அப்படி என்ன வேலை? 'பிஸினஸ்' ஆரம்பிக்கப் பணம் வேண்டி, நகைக்காக ஓடிவந்தானே, அப்ப மட்டும் வேலையில்லையா?

''உட்காரேன்......

அட இதென்ன பயம் பத்மா? நான் என்ன கடிச்சா முழுங்கிடப் போறேன்.''

'முழுங்கிட்டாக் கூடத் தேவலாமே'-நினைத்துக் கொண்டாள்.

''பரவாயில்லே, உட்கார்.''



# கோகுலம்

அக்டோபர் '89

பனந்துண்டு மடியிலே ஆறணா

— திருமுருக கிருபானந்த வாரியார்

தடகள சாம்பியன் ஆவது எப்படி?

— பேட்டிக் கட்டுரை



இந்திரனை வென்ற உக்ர பாண்டியன்
— 16 பக்க வண்ணப் படக்கதை

உட்கார்ந்து கொண்டாள்.

"என்ன பண்றே?"

சொன்னாள்.

"கேள்விப்பட்டேன், ஸாரிம்மா, நான் செஞ்சது தப்பு. அப்பவே நீ பொழைக்க நான் பணம் தந்திருக்கணும்."

". . . . . . . . . . . . . . . .

"பரவால்லே இப்ப நான் வந்ததே உனக்காகத்தான்."

"ஆர்வத்துடன் நிமிர்ந்து பார்த்தான்."

"உனக்கு என்மேல கோபம் இருக்கும் பத்மா, நியாயம்தான். ஆனா என்ன பண்றது சொல்லு. தூரத்துல இருக்கேன். எனக்கு ஒரு துணை தேவையாயிருந்தது. அவ அப்பா கூடத்தான் பிஸினஸ் பண்ணினேன். திடீர்னு அவர் செத்துப் போய்ட்டார். இவ ஒரே பொண்ணு. அம்மா இல்லை. ஸோ, குடும்பத்தை, அவளைக் காப்பாத்த வேண்டிய பொறுப்பு எனக்கு ஏற்பட்டுப் போச்சு" — பக்கா பிஸினஸ் மேன் பேச்சாக இருந்தது. "என்னையறியாம லேயே ஏற்பட்டுப் போச்சும்மா இத்தனையும்.

"உங்களுக்கு எத்தனை குழந்தைங்க?"

"ரெண்டு. ஒரு பையன் ஒரு பொண்ணு."

"இதுவும் உங்களை அறியாமலேயே ஏற்பட்டுப் போனதா?"

"ப...த்மா!"

"ஐயோ உங்களைக் குத்தணும்னு நான் சொல்லலீங்க.தாராளமா நீங்க உண்மையைச் சொல்லலாம். தூர தேசத்துல இருக்கீங்க நாலையும் பாத்து நடக்க வேண்டாமா?"

"ஆ, தட்ஸ் குட்!"

"ஆனா எனக்கு யாருங்க? உங்களை விட்டா யாரு ஆதரவு? அண்ணா கவனிக்கறதில்லை, அப்பா, அம்மா செத்துப்போய்ட்டாங்க. கூலிவேலை செய்யறேன், பிழைக்க." அழுகை பொங்க, உதட்டைக் கடித்து அடக்கினாள்.

"ச்சுச்சு."

"தயவு செய்து இப்ப என்னையும் கூட்டிக்கிட்டுப் போறீங்களா? உங்களைப்பாத்துக்கிட்டு இருந்தாப்போறும்" கெஞ்சலுடன் அவள் பேச, திகைத்தான் பலராமன்.

"அ..... அது எப்படிம்மா முடியும் அவ ஏத்துக்க மாட்டா!"

அதிர்ந்து போய் எழுந்தாள் பத்மா. 'படக்' கென்று அழுகை நின்றது. அவனையே வெறித்துப் பார்த்தாள்.

"அவ ஏத்துக்க மாட்டா, ஆனா உனக்கு ஒருவழி பண்ணணும்னு மட்டும் நாங்க நினைச்சோம். இதோ பாத்தியா உன்கிட்ட வாங்கின நகைக்கு ஈடான பணத்தோடு மேற்கொண்டு போட்டு குடுத்திருக்கேன் ஒரு வீடு கட்டிக்க; மிச்சத்தை பேங்கல போட்டுக்க. 'நிம்மதி'.

"ச்சி" என்பது போல் அவனையே பார்த்தாள் பத்மா. நீயும் ஒரு மனுஷனா! பணம் கண்டு மாறும்பச்சோந்தியான உனக்காகவா நான் காத்திருந்தேன். அவள் சின்ன சிரிப்போடு அதை ஒதுக்கினாள்.

"ஏன் பத்மா?"

"எனக்கு வேணாங்க."

"ஏன்?"

"நீங்களே சொந்தமில்லைன்னு தெரிஞ்சதுக்குப் பிறகு இந்தப் பணத்தால் மட்டும் என்னங்க லாபம்?"

"பணம்... பத்மா!"

"இந்தப் பணத்தால இழந்ததை வாங்க முடியுமா?"

"எதை இழந்துட்டே?"

"நீங்க, என் வாழ்க்கை, முடிந்து போன என் இளமை... தூரத்துல தனியே இருந்தேன்னு கல்யாணம் செஞ்சுக்கிட்டீங்க, நானும் தனியாத்தான் இங்கே இருந்தேன்.."

. . . . . . . . . . .

"அதாங்க பொண்ணு. புருஷன் நினைவிலேயே அவ வாழ்ந்துடுவா, பணத்தை நீங்களே வச்சுக்குங்க.

"உன் நகைகளைக் கொடுத்தியே பத்மா!"

"அதை என் புருஷனுக்குக் கொடுத்தேன். என் புருஷன் நல்லாயிருக்கணும் ஓஹோன்னு வரணும்னுதான் நான் கொடுத்தேன். ஆனா பணம் வந்ததும் நீங்க உதறிட்டீங்க. நான் உதற மாட்டேன், திருப்பி இதை வாங்கிக்கிட்டா நான், நம்ப உறவை, பந்தத்தை விலை பேசினதா ஆயிடும். என்னைக்கும் நீங்கதான் என் மனசுல. அதிலேயிருந்து உங்களை இறக்க விரும்பலை. உங்களைப் பொறுத்தவரை நம்ப உறவு முடிஞ்சிருச்சி. ஆனா எனக்கு முறியலை. அதுக்கு ஆதாரமா இது உங்ககிட்டயே இருக்கட்டும். வர்றேன்!" பத்மா சின்ன சிரிப்புடன் வெளியேற,பலராமனின் உள்ளத்தில் முதல் முறையாக ஊசி குத்த ஆரம்பித்தது.

தெரு விளக்கின் வெளிச்சம் நாகம்மாவின் மேல் விழுந்திருந்தது. புரண்டு புரண்டு படுத்து ஆடைகள் கலைந்து போயிருந்தன.

''நாகம்மா எழுந்திரு'' பானுமதி மெல்ல குரல் கொடுத்தாள். ஏதோ முணுமுணுப்பாய்ப் பதில் கிடைத்தது. பதிலும் கனவில் சொல்வது போல் இருந்தது. அருகே போய் தோள் உலுக்கி எழுப்பினாள்.

''எழுந்திரு நாகம்மா! எழுந்து தண்ணி குடிச்சுட்டுப் படு.''

''யம்மா!'' விலுக்கென்று அவள் எழுந்து உட்கார்ந்து, 'என்னம்மா?' என்று கேட்டாள்.

''தூக்கத்துல நிறைய உளறி பேசி... தண்ணி குடி...'' உள்ளே போய் சொம்பு நீருடன் வர, நாகம்மா சுவரோடு சாய்ந்து உட்கார்ந்திருந்தாள்.

''ஐயோ... உன் தூக்கம் கலைச்சிட்டேனா?'' குரலில் மன்னிப்பு வழிந்தது. முகத்தில் கூச்சம் மின்னிற்று.

''கனவுல உங்கம்மாவோட பேசினியா? ஆத்தா ஆத்தாங்கற....''

''அம்மாதான். எல்லாருக்கும் அம்மாதான். இது அடிக்கடி வருதும்மா.''

''என்னது?''

''மாரியாத்தா சூலத்தோடு வந்து நிக்கிது நாலு தெரு கூடற இடத்துல, பட்டப் பகல்ல காரு வண்டிங்க போகச் சொல்ல நடை போட்டு ஆட்டம் ஆடுது. மத்தவங்க யாருக்கும் தெரியலை நாலஞ்சு பேர்தான் எழுந்து கும்புடறம். அம்மாவைப் பார்த்ததும் எனக்கு அப்பிடியே துக்கம் பொங்கிடும். நடுரோட்ல கால்ல விழுந்து கதறுவேன். ஆத்தா அப்படி தாண்டி போடின்ற மாதிரி ஆடுமே தவிர ஒரு பேச்சு பேசாது. பேசக் கூட மாட்டேன்றயேடின்னு பொங்கிரும் எனக்கு. குத்தி யாருனா கொன்னுட மாட்டாங்களான்னு தோணும். ஒரு பஸ்ஸு உயரத்துக்கு நிக்கும்மா மாரியாத்தா.''

பானுமதி சிரித்தாள்.

''சத்யமா! பல தடவை பார்த்துட்டேன்.''

''போடி பைத்தியம். ஆத்தாவும் இல்லை அம்மாவும் இல்லை.''

''பொய்யின்றியா....?''



''உன் மனசு. வேதனை தாங்காத உன் மனசு! உன் வேதன்னையை யாரும் காதுல போட்டுக்கலை. நான் சரி பண்றேன்னு வரலை. அதான் கனவுல பேச ஆரம்பிச்சுட்டே... நான் உன்னை இருன்னு சொன்னது வீட்டு வேலைக்கு மட்டுமில்லை நாகம்மா. ஏதோ ஒரு சமயத்துல மனசு முடியாத போச்சுன்னு தோணிச்சா, ஒன்னு ஒரு குரல் அழறதுக்கு. வேற பொம்பளைக்கு என் இடம் தெரியாது. ஏன், பெத்தவளுக்கே கூட புரியாது. இந்த அழுகைக்கு அவன் கூடவே அடியோ உதையோ பட்டுகிட்டு கிடக்கலாம்ன்னுவாங்க. திமிருதானே வெளியே வந்தது, அப்புறம் என்னடி அழுகைனுவாங்க. அழவும் முடியாத, அடுத்த ஆள்கிட்ட பேசவும் முடியாத....''

''அப்படி இல்லையம்மா...''

''என்ன அப்படி இல்லை?''

''எல்லா பொம்பளைக்கும் இந்த துக்கம் புரியும். அடியே நீ அறுத்துக்கிட்டு வந்துட்டே எனக்கு முடியலைடின்னுதான் சொல்வாங்க.''

''உன்கிட்ட. உன்கிட்ட பேசுவாங்க அப்படி! நீ படியிறங்கி போனப்புறம் பேச்சு வேற மாதிரி இருக்கும். 'இவகிட்ட பூ வாங்க றேம்பாரு என் தலையெழுத்து'ன்னுவாங்க. எல்லா புருஷனும்தான் மிரட்டறான் கை ஓங்கறான். இதுக்கு அறுத்துண்டா வேறு எதுக்குத்தான் பொம்பளையா இருக்கறது, அப்படின்னுவாங்க. அதே பொம்பளை உன்கிட்ட பேசும் போது, 'அவரு வீட்டுக்கு வரச் சொல்ல பூ வாங்கி வந்துடறாரு நீ சிரமப்படாதேன்'னு நைஸா பேசிடுவா. அழுதது போதும் நாகம்மா. மத்தவங்களால நாம பட்ட வேதனை போதும். நம்மை நாமே சாவடிச்சுக்க வேணாம்.''

''புரியுதும்மா.''

''படு!''

''யம்மோய்!''

''என்ன?''

''நெஞ்சுலஒட்டினாமாதிரிபேசிட்டம்மா.''

''நான் பட்டிருக்கேண்டி. ஆயிரம் செஞ்ச பிறகும் அவஸ்தை பட்டிருக்கேன்.''

''ஏம்மா! ரொம்ப அடிப்பாரா?''

ஜில்லென்று கண்ணில் துக்கம் பொங்கிற்று. இன்னும் இரண்டு சொல்லி புலம்ப ஆசை வந்தது. சட்டென்று தலையைக் குலுக்கிக் கொண்டாள். எதற்குச் சுயபரிதாபம்? அது முடிந்த கதை.

''விடிஞ்சு பேசிக்கலாம் தூங்கு.''

— சொல்லி விட்டு உள்ளே போனாள்.

**அ**வனுக்குக் கடவுள் இல்லை என்கிற வாதம் உவப்பாய் இருந்தது. ஆனால் அவன் எந்தக் கொள்கைகளையும் புரிந்து பின்பற்றுகிறவன் இல்லை. தன்னை ஏதோ ஒரு குழுவில் இணைத்துக் கொள்ளக் கொள்கையும் கூச்சலும் எதிர்ப்பும் இலக்கியமும் அடையாளமாகப் பூண்டவன்.

உடம்பு சூடோ, உணவு தவறோ, உடம்பெல்லாம் அக்கி வந்தது அவனுக்கு. பூசாரி மண் எழுதினால் மறுநாளே

பாலகுமாரன்

போய் விடும் என்றார்கள். அம்மன் கோவில் பூசாரி செம்மண்ணால் முகம் முழுவதும் உடல் முழுவதும் வரைந்தான். முகத்தைக் குரங்காக்கினான். இளநீரும் பேயன் பழமும் வெள்ளரிச் சாறும் குடிக்கச் சொன்னான். உணவால் சரியாயிற்றா, உருவம் எழுதியதால் குணமாயிற்றா தெரியவில்லை.

மறுநாள் வடிந்தது. மூன்று நாட்களில் குணம் தெரிந்தது. பத்து நாளில் தடையமே அற்றுப் போயிற்று.

வீட்டிற்கு வந்த உறவு யாரோ இதற்கு ஆச்சர்யப்பட, விவாதம் துவங்க, முடி இறக்குதல் பற்றி பானுமதி பேசினாள்.

"அழகு என்பதன் உச்சகட்டம் தலைமுடி, கேச வளர்ச்சி, அதன் பராமரிப்பு. வாளிப்பான உடம்பு முடியற்று இருந்தால் கண் கொண்டு பார்க்க முடியாது. பின்னலும் கொண்டையும், மீசையும், தலை சிலுப்பும் கர்வத்தின் வெளிப்பாடுகள். தன் கர்வம் தானே அழித்தலே முடியிறக்குதல். உயிர் மீது ஆசை உள்ளவன் கர்வம் அழிக்க வேண்டும். தலை மழித்து மீசை வழித்து அடையாளமற்றுப் போக வேண்டும். கர்வம் அழிப்பது எளிதல்ல." என்று வாதம் செய்தாள்.

"அப்போ முகத்துல மண் எழுதறதும் அப்படித்தான்றீங்களா?" — உறவு கேட்டது.

"ஆமாம். தன் முகத்தைத் தானே முன் வந்து கோரமாக்குதல். செம்மண்ணில் தன் அழகு அழிந்து தன் இனிய முகத்தைக் குரங்காக்கிக் கொள்ளுதல்."

'உர்' என்று கேட்டுக் கொண்டிருந்தான். வந்த உறவு போன பிறகு, விரல் வழித்து கண் மை எடுத்தான். 'இங்க வாடி!' என்றான். பின்னால் மறைத்துக் கொண்டான்.

"நீ அழகா அழகில்லையா?"

"சுமாரான அழகு. ஏன்?"

"சுமாரான அழகுன்னா?"

"பார்த்தா கண்ணுக்கு இதமாப்படற அழகு."

"இதுல கர்வம் வருமா?"

இவன் செய்யப் போவது அறியாது. 'வரலாம், ஏன்?' என்றாள்.

"வரக் கூடாது! மூஞ்சியைக் காட்டு!" கறுப்பு மையைக் கண்ணுக்குக் கீழ் முகவாயில் முகத்தில் அப்பினான். "இன்னி முழுக்க இப்படியே இருக்கணும். இப்பப் பார் உன்னை! தோலுரிச்ச சூர்ப்பனகை மாதிரி இருக்க பார்!" கண்ணாடி காட்டினான்.

ஆத்திரமும் துக்கமும் உள்ளே பொங்கின. ஒரு தத்துவம் புரிந்து கொண்டு விளக்கினது பாவமா! அதற்குத் தண்டனையா?

அடக்கிக் கொண்டு பேசினாள்.

"மார்க்கெட் வரைக்கும் போகணுமே போயிட்டு வந்துடட்டுங்களா?"

"எப்படி போவே?"

"இப்படியேதான்."

"யாருனாச்சும் கேட்டா?"

"எங்க வீட்டுக்கார் என் அழகு பிடிக்காத இப்படிச் செய்துட்டாருன்னு..."

கொத்தாய் முடி பிடிக்கப்பட்டு, சமையலறைக்குள் தள்ளப்பட்டாள்.

"பொட்டச்சிங்களைப் பேச விட்டா இதுவும் பேசுவீங்க. இதுக்கு மேலயும் பேசுவீங்க. போடி உள்ளாற?"

**மா**லை தலைவர் வீட்டில் விருந்து என்று ஆள் வந்தது.

கெஞ்சினான் கொஞ்சினான். 'கோபத்தில் செய்து விட்டேன்' என்றான். 'இது வேணாம் வேற உடுத்திக்கோ. பட்டு இல்லை, பதக்கம் இல்லை — அது போட்டுக்கோ' என்றான். பதினைந்து நண்பர்களுக்குத் தலைவர் வீட்டில் விருந்து, பேத்திக்குப் பிறந்த நாள் விழா.

முழங்கால் உயர பொம்மையோடு குழந்தையைக் கொஞ்சி விட்டு, தலைவர் அருகே போய் உட்கார்ந்து கொண்டான்.

பெண்கள் கீழே உள்ள ஹாலில் உட்கார்ந்து கொண்டார்கள். தலைவரின் மனைவிக்குத் துணையாகப் பானுமதி பரிமாறினாள். பந்தி விசாரணை செய்தாள். எல்லோரும் மாடிக்குப் போக, தலைவரின் மனைவியோடு பானுமதி சாப்பிட உட்கார்ந்தாள்.

"ஏன் பானு, அழுதியா?" முகமெல்லாம் மை கரைஞ்சிருக்கு?"

"ஒன்றுமில்லையம்மா."

"அலட்டறாரா கவிஞரு? நாலு பேர் பாராட்டினா போதும் இவங்களை! வீட்ல இருக்கறவங்க உள்ளங்கைல தாங்கணும்னு நினைப்பாங்க நான் அதட்டி வைக்கட்டா?"

"ஐயோ அதெல்லாம் வேணாம்." பளிச்சென்று தடுக்கப் போனதில் அந்த அம்மாள் அதிகம் புரிந்து கொண்டாள்.

**உ**ணவு முடித்து, தலைவர் மனைவியுடன் மேலே போனாள். அவர் நிமிர்ந்து பார்த்ததும் கரம் குவித்தாள்.

"வந்திருக்கிறீங்களா? கவிஞர் சொல்லவேயில்லையே? நலமா?"

"என் கூடப் பேச உட்கார்ந்து விட்டான். அவரவர் வீடு பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்." கதிரேசன் லேசாய் முகம் மாறினான்.

"வேலைக்குப் போகிறீர்களா?" தலைவர் சட்டென்று நிமிர்ந்து பானுமதியைக் கேட்டார்.

"ஆம் ஐயா."

"எந்தப் பள்ளி?"

பெயர் சொன்னாள்.

"கணிதமா?"

"இல்லை ஐயா; ரசாயனம்."

"இலக்கியத்தில் ஆர்வம் உண்டா?" புன்

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/3112/TAM

சிரிப்புடன் கேட்டார். ''இடையே உட்கார்ந்து விட்டீர்களே, ஒருவேளை இலக்கியத்தில் ஆர்வம் இல்லையோ என்பதால் கேட்டேன்.''

''எலதயும் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வம் உண்டு ஐயா. அது இலக்கியமாய்த்தான் இருக்க வேண்டும் என்று இல்லை.''

''கூடுதல் ஆர்வம் எதில் உண்டு?''

''வாழ்க்கையில்.''

''புரியவில்லை!'' — கூர்மையாகப் பார்த்தபடி புருவம் உயர்த்தினார்.

''...பிறப்பு — இறப்பும் இடைப்பட்ட வாழ்க்கையும். மாறிக் கொண்டிருக்கிற நாகரிகமும். நாகரிகம் முன்னிட்டு மனிதன் மனிதனிடம் செய்த இடைவிடாத போர்களும். வன்முறையும், வன்முறையோடு காதலித்ததும். வன்முறையைக் காதலித்ததும்...''

மெல்லத் தலைவர் கைதட்டினார். கூட்டம் உச்சஉச்சென்று குரல் கொடுத்தது. கதிரேசன் முகம் கல்லாய் இருந்தது.

''தத்துவ ஈடுபாடு என்று சொல்லுங்கள்.''

''ஆமாம்.''

''இவ்வளவு சிறிய வயதில் தத்துவத்தின் மீது நாட்டம் எப்படி வந்தது? கவிஞர் காரணமென்று சொல்லாதீர்கள். நிலவுக்கு ஆடை மேகம். நிலத்துக்கு ஆடை நிழல்கள். நினைவுக்கு ஆடை கனவு. என் நெஞ்சுக்கு ஆடை மனைவி என்று பாடியவர் கவிஞர்!''

சிரித்தார்கள்.

''அகப்பாடல் கவிஞருக்கு. தத்துவவாதியாய் மனைவி! ஒட்டவில்லையே...'' — வியந்தார்.

பானுமதி பேசாதிருந்தாள். பேச்சு திசை மாறியது.

**த**லைவருக்கு வெகு தொலைவிலிருந்து அவசரத் தொலைபேசி வர, கூட்டம் எழுந்தது. விடைபெறக் காத்திருந்தது. வேறு யாரோ பேசப் பிடித்துக் கொண்டார்கள்.

தலைவர் மனைவியுடன் ஹாலுக்கு வந்தார். தனித்தனியே கரம் குவித்தார்.

கதிரேசனைத் தனியே நிறுத்தி மற்றவர்களை அனுப்பினார்.

''கதிரேசன்!''

''ஐயா?''

''உங்களைப் பற்றிக் குறைகள் பலர் சொல்கிறார்கள். உங்கள் தமிழின் வளம் கருதி நான் பெரிதுபடுத்தவில்லை. நீங்கள் வளர்ந்து விட்டீர்கள். பொறுப்பு அதிகமாகிறது. பொறுமையுடன் நடந்து கொள்ளுங்கள்.''

''புரியவில்லை ஐயா!''

''அழுத முகத்தோட பொண்டாட்டியக் கூட்டிக்கிட்டு வராதீங்கன்றாரு.'' — அவர் மனைவி சுன்னென்று பேசினாள். பானுமதி ஒரு கலவரம் உணர்ந்தாள்.

''போதும். அவருக்குப் புரியும். என்னிடம் சில புத்தகங்கள் யாரோ பரிசளித்தவை இருக்கின்றன. உங்கள் தத்துவ பசிக்கு உதவுமா என்று பாருங்கள். நாளை அனுப்புகிறேன்.''

கைகூப்பி விட்டு நகர்ந்தார்.

அவர் இல்லத்து வண்டி அவர்களைச் சுமந்து கொண்டு வீடு வந்தது.

**அ**வன் துணிகளைக் கழற்றி வீசி விட்டுப் போய்ப் படுத்துக் கொண்டான். வீசிய துணிகளை அவள் எடுத்து வைத்து விட்டுக் கட்டிலுக்கு வந்த போது சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

''வெளியே போய்ப் படு! இனி இங்கே படுக்க வேணாம்!''

''ஏன்?''

''பிறப்பு — இறப்பு வாழ்க்கைப் போராட்டம்னு யோசிக்கறவளுக்குப் புருஷன் எதுக்கு?''

''யார் ஆசைப்பட்டது புருஷன் வேண்டுமென்று? ஆசைப்படுகிறது போல என்ன இருக்கிறது புருஷனிடம்?'' — சிரித்தாள்.

''கொழுப்பாயிடுச்சுடி உனக்கு! தத்துவம் பேசிறியா? காயப் போட்டா, தானா படிவே! போ! போய் வெளியே படு!''

அவள் தலையணையை எடுத்துக் கொண்டு ஹாலுக்குப் போனாள். குழந்தை அருகே படுக்கை விரித்துப் படுத்துக் கொண்டாள். அசந்து தூங்கிப் போனாள்.

காலையில் முகம் கொடுக்காமல் தொட்டதற்கெல்லாம் சீறிக் கொண்டிருந்தான். அவள் உதவிகளை மறுத்தான்.

சட்டையணிந்து பேண்ட்டுக்கு உள்ளே விட்டு பெல்ட் தேடினான்.

இரண்டு வயது மகன் பெல்டோடு விளையாடிக் கொண்டிருந்தான். தன் உடம்பில் சுற்றிப் போட்டுக் கொண்டிருந்தான்.

''கொண்டாடா அதை!'' வெடுக்கென்று பிடுங்க, இரண்டு சுற்று உடம்பில் சுற்றிக் கொண்டிருந்த குழந்தை எகிறி, சுழன்று, தரையில் விழுந்தது. 'வீல்' என்று கத்திற்று!

பானுமதி குழந்தையை வாரி எடுத்துக் கொண்டாள். முன் பற்களிலிருந்து ரத்தம் கொட்டுவது பார்த்துப் பதறினாள்.

''மனுஷனா நீ!'' சீறினாள்.

''வரேன். சாயந்திரம் வந்து சொல்றேன்.'' கதவை அடித்துத் திறந்து வெளியேறினான்.

பானுமதி தலைவருக்கு ஃபோன் செய்தாள். அழுகையும், பதற்றமுமாய் அவன் நடத்தை பற்றிப் புகார் செய்தாள்.

''கவலைப்பட வேண்டாம். நான் டாக்டரை உடனே அனுப்பி வைக்கிறேன். முதலில் குழந்தையைக் கவனியுங்கள்.'' ஃபோன் துண்டிக்கப்பட்டது.

(தொடரும்)

# 'குட் மார்னிங்' சொன்ன

சென்ற வாரம் கேட்ட ஒன்பது கேள்விகளுக்கான விடைகளை முதலில் தந்து விடுகிறேன்:

1. 104 பக்கங்கள்
2. 99 வெட்டுகள்
3. 200 கணைகள்
4. 146 2/3 செகண்டுகள்
5. 20 (99க்கு இரண்டு ஒன்பது!)
6. 40 போஸ்ட்டுகள்
7. ஏழு முறை
8. பத்து முறை
9. 50 × 101

இப்போது voice recognition பற்றி...

குரல் என்பது என்ன? உங்கள் மனைவி, மகன், உயர் அதிகாரி, அபிமான நடிகை, இவர்களின் குரல் எல்லாம் உங்களுக்குப் பரிச்சயமாக உள்ளது. அடுத்த அறையில் பேசுபவரின் குரலைக் கேட்டே உங்களால் ஆசாமியை அடையாளம் கண்டுபிடிக்க முடிந்து, கடன் கேட்க வந்திருக்கிறார், வீட்டில் இல்லையென்று சொல்லி அனுப்ப முடிகிறது!

இது எப்படிச் சாத்தியம்? உங்கள் குரலுக்கும் என் குரலுக்கும் வித்தியாசம் என்ன?

ஆதாரமாகத் 'தமிழ்' என்று நான் சொல்வதற்கும் 'தமிழ்' என்று நீங்களோ, முதல்வர் கருணாநிதியோ, சத்யராஜோ, ரஜினிகாந்தோ, ராமசாமியோ சொல்வதற்கும் வித்தியாசம் உள்ளது. வார்த்தை அதே தான்; ஆனால் ஏதோ ஒரு விதத்தில் வேறுபாடு உள்ளது.

முதலில் ஆதார சுருதியில் மாற்றம். பிட்ச் (pitch) என்பார்கள். ராமசாமிக்குக் கீச்சுக் குரல். எனக்குக் கட்டைக் குரல். இந்தத் தன்மையைப் 'பிட்ச்' என்பார்கள்.

எஸ். பி. பாலசுப்ரமணியம் பாடினால் நன்றாக இருக்கிறது. நான் பாடினால் எழுந்து போகிறீர்கள். அதே பாட்டு, அதே வார்த்தைகள் அதே மெட்டு. எனக்கும் எஸ். பி. பிக்கும் என்ன வித்தியாசம்?

குரலில் கலந்துள்ள ஹார்மோனிக்ஸ் (Harmonics). ஹார்மோனிக்ஸ் என்பது, ஆதார சுருதியுடன் கலந்த நகாசு வேலைகள். அரஸ் வரைந்த யானைச் சித்திரத்துக்கும், அடுத்த வீட்டு அம்பி வரையும் யானைச் சித்திரத்துக்கும் உள்ள வித்தியாசம். வடிவக் கட்டுப்பாடு. வேவ் ஃபார்ம் (wave form).

கம்ப்யூட்டர் மனிதன் போல் பேச, அதற்குச் சில விவரங்கள் தர வேண்டும். கம்ப்யூட்டரைத் 'தமிழ்' என்று சொல்ல வைக்க வேண்டுமானால், த, ம, இ போன்ற ஒலி வடிவங்கள், ஃபோனிம்கள் (phonemes) எப்படி ஒலிக்க வேண்டும்? அவற்றின் வடிவம் என்ன? வரி வடிவம் என்ன? என்பதைச் சொல்ல வேண்டும். இந்த ஃபோனிம்களை 'ஒலியன்கள்' என்று சொல்கிறார்கள். சுமார் அம்பத்தாறு ஒலியன்களை வைத்துக் கொண்டு, சாதாரணமாக எல்லா வார்த்தைகளையும் உச்சரித்து அமைக்க முடியும்.

ஒலியன்களும் எழுத்துக்களும் வேறுபட்டவை. தமிழின் பல எழுத்துக்கள், ஒலியன் வடிவத்தில் இருப்பதால் இதைப் ஃபோனிமிக் லாங்வேஜ் என்பர். ஆங்கிலம் போன்ற மொழிகள் அவ்வாறில்லை. ஃபாதர் என்று எழுதினால் எழுத்துக்கள் ஆறு. ஒலியன்கள் அஞ்சு! ஃப் ஆ த் அ ர்.

பெர்னார்ட் ஷா ஆங்கிலத்தை 'ஃபோனெடிக்' வடிவத்தில் கொண்டு வர முயன்று தோற்றார். மாற்றுபவர்களுக்குக் கணிசமான சொத்து கூட எழுதி வைத்திருக்கிறார். அவ்வளவு சுலபமில்லை! கம்ப்யூட்டரினால் முடிந்திருக்கிறது. மனிதர்களால் முடியாதது கம்ப்யூட்டரால் முடிந்திருக்கிறது. ஆதாரமாக, ஆங்கில மொழியை ஒலியன்களாக மாற்றி, அவற்றின் மின் வடிவத்தைக் கண்டு கொண்டு, குறிப்பிட்ட மாத்திரத்தில் இந்த ஒலிச் சேர்க்கைகளை இசைக்கும் சிலிக்கன் சில்லு கொண்டு வந்து விட்டார்கள். இதற்கு வாய்ஸ் சின்தஸைஸர் சிப் (Voice Synthesiser Chip) எனப் பெயர். இதை ஒரு



* அதிநவீனத் தொலை தொடர்புச் சாதனம்.

* தொலைதூரத் தொடர்புக்கு உதவும் சக்தி வாய்ந்த ரேடார்கள்.



# 'சில்லு' 8

## சுஜாதா

குட்டி கம்ப்யூட்டருடன் இணைத்து, ஆணைத் தொடர் கொடுத்தால் ஆணையிட்ட வார்த்தைகளைப் பேசிக் காட்டும். பேச்சு ஒரு மாதிரி, மெஷின் தனமாக இருக்கும். ஆனால் புரியும். இப்போது அதன் மெஷின் தனத்தைக் கொஞ்சம் குறைத்துச் சராசரி அமெரிக்க அல்லது ஜப்பானியக் குரலில் பேசும் அளவுக்குத் திருத்தங்கள் கொண்டு வந்து விட்டார்கள்!

அண்மையில் நான் ஜப்பான் போயிருந்த போது ஓட்டல்களில் காலை எழுப்ப வசதியிருந்தது. அலாரம் அமைத்த நேரத்துக்கு இனிமையான ஜப்பான் குரல் முதலில் ஜப்பானிய மொழியிலும், பின், 'குட்மார்னிங்' என்று ஆங்கிலத்திலும் நம்மை எழுப்புகிறது.

ஆனால் நான் அதற்கு முட்டாள்தனமாக 'தாங்க்யூ' சொல்லிக் கொண்டிருக்க வேண்டாம்! ஏனெனில், அது பெண்ணல்ல; சில்லு! இந்த மாதிரி வாய்ஸ் சின்தஸைஸர் சில்லுகள் மேல்நாடுகளில் பரவலாகப் பயன்படுகின்றன — லிஃப்டுகளில், தரையடி ரயில்களில், ஸ்டேஷன் பெயர், எச்சரிக்கைகள், டெலிபோனில், மணி......

அனைத்துமே கேள்வியற்ற பதில்களுக்குப் பயன்படும் உணர்ச்சியில்லாத செய்திக் குரல்கள். நம் நாட்டிலும் கம்ப்யூட்டர் குரல்களை அதிகம் கேட்கப் போகிறோம். வாய்ஸ் சின்தஸிஸ் என்பது சுலபம். வாய்ஸ் ரெகாக்னிஷன்? குரலை அடையாளம் கண்டுபிடிப்பது கம்ப்யூட்டரால் முடியுமா? முடியும். ஆனால் இந்த இயல் இன்னும் அதன் ஆரம்ப நிலையில் இருக்கிறது.

நம் மூளை ஒரு குரலை அடையாளம் கண்டுபிடிக்கும் விதத்தைப் பற்றி அதிகம் நமக்கு ஞானம் இல்லை. காதுக்குள் சின்னச் சின்ன அடையாள ஃபில்டர்கள் வைத்து, குரலில் இருக்கும் அத்தனை சுருதிகளையும் தனித்தனியாகப் பகுத்து, ஒட்டுமொத்தமான ஒரு வடிவத்தை அமைத்து அதை மூளையில் சேர்த்து வைத்திருக்கும் பிற வடிவங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து, 'அட! இது நம்ம சித்ரா குரல்' என்று நொடியில் சொல்லிவிடும். அந்த ஜாலத்தைக் கம்ப்யூட்டரில் கொண்டுவரக் கஷ்டப்படுகிறார்கள். இருந்தும் இந்த நூற்றாண்டின் இறுதியில் அதில் கணிசமான வெற்றி பெற்று விடுவார்கள் என்று தோன்றுகிறது.

இப்போதே கம்ப்யூட்டருக்குள் ஒரு சில வார்த்தைகளை ஒரு முறை பேச விட்டு, அதில் பதிவு செய்து கொள்ள வைத்துவிட்டால், அதே வார்த்தைகளை நீங்கள் அடுத்த முறை ஒலிக்கும் போது அதை உங்கள் குரல் என்று அடையாளம் கண்டு கொள்ளக் கூடிய சுமாரான திறமை கம்ப்யூட்டர்களுக்கு வந்திருக்கிறது.

பயன்...?

வீட்டுக்குள் அல்லது முக்கிய அலுவலகங்களுக்குள் உங்களை அனுமதிக்க உங்கள் குரலைப் பயன்படுத்தலாம். கை, கால் விளங்காதவர்கள் டெலிபோன் பேச அல்லது கம்ப்யூட்டரை இயக்க அவர்கள் குரலைப் பயன்படுத்தலாம். மற்றவரோடு பேசும் போது உங்கள் குரலை அடையாளம் கண்டு கொண்டு எத்தனையோ கதவுகளைத் திறக்கலாம். பேச்சை அடையாளம் கண்டு கொள்வதும் புரிந்து கொள்வதும் வேறு வேறு விஷயங்கள். கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் அடையாளம் வேறு அர்த்தம் வேறு என்பது புரியும். உதாரணத்துக்கு 'அடி' என்ற எளிதான வார்த்தையை எடுத்துக் கொள்ளுங்கள். இதைக் கம்ப்யூட்டரால் அடி என்று அடையாளம் கண்டு கொள்ள முடியுமே தவிர, ஓர் ஆளை அடிக்க விருப்பமா, 'அடி' என்று ஒரு பெண்ணைக் கூப்பிடவா, அடிமட்டமா, பன்னி



### ஒரு ராஜா; ஒரு ஜாக்கி!

'என்னிடம் உள்ளது ஒரு ராஜா, ஒரு ஜாக்கி' என்ற சரியான விடையையும் அதற்கான காரணத்தையும் ஏந்தி 31.8.89 அன்று வந்து சேர்ந்த கடிதங்களுள் முதலில் நமது பார்வையில்பட்டது அனந்த புரம், கே. குலசேகரன் எழுதியது. "கம்ப் யூட்டரின் கதை" என்ற சுஜாதாவின் புத்தகத்தைப் பரிசாகப் பெறும் அவரது முழு விலாசம்:

கே. குலசேகரன்,
35, பெரிய தெரு,
அனந்தபுரம்,
தெ. ஆ. மாவட்டம்.
— 605 201.

### இந்தியாவுக்கு முதன் முதல் கம்ப்யூட்டர் வந்தது எப்போ?

27. 8. 89 இதழில் கேட்டிருந்த கேள்விக்கு விடை: 1955. சரியான விடை எழுதிய ஐம்பத்து மூன்று பேர்களுள் குலுக்கல் முறையில் ரூ. 25/– பரிசு பெறுபவர்

வி. மாதவ ராவ்,
4, முதல் தெரு,
எல். ஐ. சி. காலனி,
வ. உ. சி. நகர்,
வேலூர் — 632 001.
வடாற்காடு மாவட்டம்.

ரண்டு இன்ச்சா, இல்லை ஒரு வாரத்தி லேயே படுத்துவிட்ட சினிமாவா?

இவற்றில் எதைப் பற்றிக் குறிப்பிடுகிறீர் கள் என்று கம்ப்யூட்டரால் சொல்ல முடி யாது. இதற்கு அறிவு வேண்டும். கம்ப்யூட் டருக்கு எத்தனை தூரம் அறிவு கொண்டு வர முயற்சி செய்கிறார்கள் என்று பார்ப்ப தன் முன், அடுத்த கட்டுரை, கம்ப்யூட்டர் சங்கீதத்தில் செய்யும் சாகசங்களைச் சொல்ல விரும்புகிறேன். அதற்கு முன் ஒரு

கேள்வி: மிடி (MIDI) என்றால் என்ன?

சரியான விடை அளிக்கும் நாலு பேருக்கு, இளையராஜா இசையமைத்த காஸெட் ஒன்று பரிசு — குலுக்கல் முறையில். கடைசித் தேதி: 25.9.89.

(தொடரும்)

---



"நீ மட்டும் உங்க ஆபீஸ்ல இரட்டைச் சம்பளம் கேட்டியாமே...?"

"பின்னே...? எல்லாருக்கும் ஒரு கனவு வரும்போது எனக்கு மட்டும் ரெண்டு கனவு வருதே...?"

— சீர்காழி ஸ்ரீராம்.



"சார்! ரெண்டு மாசத்துக்கு முன்னாடி ஒரு அனாதைப் பெண்ணுக்குத் திருமணம் செய்து வச்சோமே! அந்தப் பெண் வந்திருக்கு!"

"என்ன விஷயமாம்!"

"வரதட்சிணைக் கொடுமையாம். ஸ்கூட்டர், ஃபேன், ப்ரிட்ஜ் எல்லாம் வேணுமாம்!"

— ஆம்பூர். பரந்தாமன்.



"ஆளும் கட்சி மீட்டிங்கைவிட எதிர்க்கட்சி மீட்டிங்குக்கு அதிகமாக் கூட்டம் வந்ததுன்னு எப்படிய்யா சொல்றே?"

"நாலு முறுக்கும் மூணுபடி சுண்டலும் அதிகமா வித்துதே!"

"சுவையான சம்பவங்கள்"—

# "இனிய அதிர்ச்சி!"

மாலை மிகச் சரியாக மணி ஆறு. திருச்சி ஸ்ரீராம் சிட்டு நிறுவனத்தின் ஏலம் நடக்கும் அறையில் நான் அமர்ந்து கொண்டிருந்தேன்.

எனது நண்பர் ஒருவர் தமது மகளின் திருமணத்திற்காக என்னைப் பொருளுதவி கேட்டிருந்தார். ஆனால் என்னிடம் அவருக்குக் கொடுத்து உதவப் பணம் ஏதும் இல்லை; ஏனெனில் நான் என்னிடமிருந்த சேமிப்பு முழுவதும் வீடுகட்ட செலவழித்திருந்தேன். "1989 – ஆம் ஆண்டு ஜுலை 21 – ஆம் தேதி 11—வது ஏலம்..... சீட்டு மதிப்பு ரூ. 25,000/— ஏலம் கேட்க ஆரம்பிக்கலாம்," என்று ஏலம் நடத்தும் ஸ்ரீராம் ஊழியர் குரல் கொடுத்தார்.

நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன். "இரண்டாயிரம்... மூவாயிரம்... ஏழாயிரம்... பத்தாயிரம்... ஏலத்தொகை ஏறியது. நான் உணர்ச்சி வசத்தில் ரூ. 12150/— என்று கேட்டுவிட்டேன். ஏனெனில் என் உள்ளத்தில் நண்பரின் மகளின் திருமண விஷயம் பற்றியே மனத்தில் நின்றது. "டிரிங்... ட்ரிங்... ட்ரிங்..." மணி அடித்தது. எனது ஏலத்தொகை ரூ. 12,150/— ஏற்கப்பட்டது.

"என்ன முபாரக்...! இப்படிச் செய்து விட்டீர்கள்...? 11 மாதங்கள் கழித்து இவ்வளவு தொகை ரூ. 12,150/— தள்ளி என் சீட்டை எடுத்தீர்கள்," என்று எனது ஏஜெண்ட் கேட்டார்.

"பரவாயில்லை சார்! எவ்வளவு தள்ளி எடுத்தாலும் பரவாயில்லை! எனது நண்பருக்கு உதவி செய்வதுதான் முக்கியம்," என்றேன். "முபாரக்! உங்களது நல்ல உள்ளத்தைப் பாராட்டுகிறேன். நீங்கள் வேண்டுமானால் பாருங்கள். உங்களுக்குக் கடவுள் ஏதாவது நல்லது செய்வார்" என்றார் எனது ஏஜெண்ட்.

நாட்கள் நகர்ந்தன. அந்த ஆகஸ்ட் 1989, 21 – ஆம் நாள் வந்தது. நான் எனது ஏஜெண்டிடம், "சார், நீங்கள் இன்று என் சார்பாக ஸ்ரீராம் சிட்ஸ் ஏலத்திற்குப் போங்கள். இன்று லட்ச ரூபாய்ச் சீட்டு 30% தள்ளிக் குலுக்கல் முறையில் நடைபெற உள்ளது," என்றேன். அவரும் "சரி" என்றார்.,

அன்று மாலை சுமார் 7 மணியிருக்கும். என் வீட்டு டெலிபோன் ஒலித்தது. ரிசிவரைக் கையில் எடுத்தேன். "முபாரக்! உங்களுக்கு லட்ச ரூபாய் சீட்டுக் குலுக்கலில் உங்கள் நம்பர் எடுக்கப்பட்டுவிட்டது! உங்களுக்கு ரூ. 70,000/— கிடைக்கும். எனது வாழ்த்துக்கள்," என்று ஸ்ரீராம் சிட்ஸ் மானேஜர் மறுமுனையிலிருந்து பேசினார். எனக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. சிறிது நேரம் கழித்து எனது ஏஜெண்ட் என் வீட்டிற்கு வந்தார். நான் அவரை அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டேன்.

"முபாரக்! சுமார் 80 டோக்கன்கள் போட்டுக் குலுக்கியதில் உங்கள் டோக்கன் 72, குலுக்கலில் எடுக்கப்பட்டுவிட்டது. உங்களது நல்ல உள்ளத்துக்காகத்தான் உங்களுக்கு இந்தத் தொகை கிடைத்திருக்கிறது. பிறருக்கு உதவி செய்ய வேண்டும் என்ற உங்களது நல்ல மனத்திற்கு இது பரிசு," என்றார் எனது ஏஜெண்ட்.

ஜுலை மாதத்தில் அதிகத் தொகை தள்ளியெடுத்துக் களைத்திருந்த எனது உள்ளத்திற்கு அடுத்த ஆகஸ்டு மாதமே அதுவும் ஒரு லட்ச ரூபாய் குலுக்கலில் ரூ. 70,000/— கிடைத்தது எனக்கு ஓர் இனிய அதிர்ச்சியே.

கே. எஸ். முகமது முபாரக்,
1-A, முஸ்லிம் தெரு,
கிருஷ்ணாபுரம், திருச்சி – 8.

# வட்டமேஜை

* சென்னை எழும்பூரில் அருண் ஐஸ்கிரீம் நிறுவனத்தினர் நடத்திய விழாவில் ஒரு கல்லூரி மாணவர் 8 ரூபாய் கொடுத்து 95 ரூபாய் பெறுமான ஐஸ் கிரீம் சாப்பிட்டாரா?! ஆகா... நினைத்தாலே 'ஜில்...!' சார். என்னைப் போன்ற திருச்சி வாசிகளுக்கும் இது போன்ற அருமையான சான்ஸ் கிடைக்குமா? என்று தினந்தோறும் ஆவலுடன் காத்திருக்கிறோம்.

லால்குடி. எம். இராஜேந்திரன்.

* 'சிதறல்களை'யும் முட்டாள் ஜோக்கையும் படித்து விட்டுப் பக்கத்து வீட்டுக்குக் கேட்கும் அளவுக்குச் சப்தம் போட்டுச் சிரித்து விட்டேன்.

திருச்சி — 2, ஆற்காடு எழிலன்.

* 'பந்த்.' குறித்து 'எனக்கு வெற்றி, எனக்குத்தான் வெற்றி' என்று முரட்டு, வரட்டுப் பிடிவாதத்தில் இருவருமே கொக்கரிக்க, பந்த் மக்களுக்கு மாபெரும் பரிதவிப்பு என்ற உண்மையை உணர்ந்து எழுதியது கல்கி மட்டும்தான்.

சென்னை — 92, கே. ராஜகோபாலன்.

* கல்கியில் வெளியான தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் தற்போதைய தலைவர் வாழப்பாடி ராமமூர்த்தியின் பேட்டி படித்தேன். '.....பதின்மூன்று தடவை பிரதமரை வரவழைத்தும் காங்கிரஸ் இங்கு வெற்றி பெறாததற்குக் காரணம் தேர்தலை நடத்திய மாநிலத் தலைமைதானே தவிர, கட்சித் தலைவர் அல்ல...' என்றும், '....காங்கிரஸைப் பொறுத்த வரையில், தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மெஜாரிட்டி ஆட்சியைக் கவிழ்க்கிற வேலையில் இறங்காது....' என்றும் அவர் சொன்ன ஜோக்குகளைப் படித்து வயிறு குலுங்கச் சிரித்து மகிழ்ந்தோம்.

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

* வாழப்பாடி ராமமூர்த்தியின் பேட்டி சிறப்பாக இருந்தது. மூப்பனாரை நேரடியாகத் தாக்காமல், அவரது ஆதரவாளர்களை ஒரு பிடி பிடித்திருந்தார். ஆனால் ''காங்கிரஸைப் பொறுத்தவரையில், தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மெஜாரிட்டி ஆட்சியைக் கவிழ்க்கிற வேலையில் இறங்காது'' என்று ஒரு கேள்விக்குப் பதில் கூறிவிட்டு, ''காங்கிரஸ் — அ.தி.மு.க. கூட்டணி பாராளுமன்றத் தேர்தலில் பெரும் வெற்றி பெற்றால், திமுக அரசு கவிழ்வதற்கு(?) வாய்ப்பு இருக்கிறது'' என்று மற்றொரு கேள்விக்குப் பதில் கூறியது சற்று குழப்பமாக உள்ளது.

திருச்சி — 2, கி. ரமேஷ்.

# 'பக்கத்து வீட்டுக்குக் கேட்டது சிரிப்பு!'

* வாழப்பாடியின் பேட்டியில் கலைஞர் ஆட்சி கவிழ்ப்பு பற்றிய கருத்துக்கள் வழ வழா; மூப்பனாரைத் தாக்குவதில் வா(ன)ழப்பழ ஊசி.

சென்னை — 28, எம். தியாகராஜன்.

* கலைஞர் ஆட்சி கலைக்கப்படுமா என்ற அறிவிப்பு வந்தவுடன் நீங்கள் தான் கவர் ஸ்டோரி தரப் போகிறீர்கள் என நினைத்து ஏமாந்தேன். வாழப்பாடியைக் கேட்டால் எங்கள் தலை (ஜெயலலிதா?) அப்படி நினைக்கிறது என்ற ரீதியில் தான் பதிலளிப்பார். கவர் ஸ்டோரி என்பதை விட 'மூப்பனாரைக் கண்டிக்கிற பேட்டி' என்பது பொருத்தமாக இருக்கும்.

குடியாத்தம், கே.வி.எஸ். மணியன்.

* 'முப்பது மாதம் தாமதம்; இரண்டரைக்கோடி நஷ்டம்' படித்ததும், நெஞ்சில் தீப்பற்றிக் கொண்டு எரிந்தது. இன்று ஒருவேளைக்கே உணவில்லாமல் கஷ்டப்படும் அப்பாவி மக்கள் எத்தனைபேர்? வேலையில்லாமல் தவிக்கும் இளைஞர்கள் எத்தனை லட்சம் பேர்? வெளிநாட்டு நிபுணர்களுக்காகச் செலவிட்ட தொகையில் தொழிற்சாலை கட்டியிருந்தால் எவ்வளவு பெருமையாக இருந்திருக்கும்?

திருவாரூர், மகரந்தன்.

* தேசிய முன்னணியின் ஒற்றுமைக்குக் காரணம் எதிர்க்கட்சியினரின் ஒற்றுமை, நல்ல அண்டர்ஸ்டான்டிங் என்றெல்லாம் வி.பி. சிங் கூறுவது சரியல்ல. அந்த அளவுக்கு இவர்களை ஒற்றுமையாக்கிய பெருமை ராஜீவ் காந்திக்கே உண்டு. ஆனால், அந்த ஒற்றுமை வருங்காலத்தில் குலைய நேரிட்டால், அந்தப் பெருமை தேசிய முன்னணியில் உள்ள சில தலைவர்களையே சாரும்.

வேலூர் — 13, கே.ஆர். தேவேந்திரன்.

* 'கோடைக்கால மேகங்கள்' — சிறுகதையைப் படித்தவுடன் கண்களில் நீர் தளும்பியது. வத்சலா போன்ற சராசரி பெண்ணிற்கு ஏற்படும் சோதனைகளும், விரக்தியும்.... அடடா! அசத்தி விட்டார்! கங்கிராட்ஸ் சாந்தி! அதற்கேற்றாற் போல் 'ஷை' யான வத்சலா, விரக்தியான வத்சலாவை ஓவியமாக வரைந்துள்ள ஜி.கே. மூர்த்தி அவர்களுக்கும் கங்கிராட்ஸ்!

தர்மபுரி — 2, வித்யா.

* திருமண விடியலை ஆர்வமுடன் எதிர் நோக்கி.. அது வருவது போல் வந்து... விடியாமல் தவித்து நின்ற ஒரு கன்னிப் பெண்ணின் உள்ளத்து உணர்வுகளைத் தத்ரூபமாக வெளிப்படுத்திக் காட்டி வே. சாந்தி எழுதியிருந்த 'கோடைக்கால மேகங்கள்' சிறுகதை நெஞ்சை நெகிழ வைத்து விட்டது!

மதுரை — 1, வஸந்தா பரமசிவம்.

* 'மூட்டம்' என்ற சிறுகதையில் இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்பது போல் சாதுவாக, சாமர்த்தியமாகத் தன் காரியத்தைச் சாதித்துக் கொண்ட லதாவை நினைத்து இன்னும் வியந்து கொண்டிருக்கிறேன்!

முடிகண்டநல்லூர், க. ராஜேந்திரன்.

* இவ்வார சிறுகதைகள், மனத்தில் நிலவும் சஞ்சலங்கள், யதார்த்த சூழ்நிலைகளை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டிருந்தன. குடும்பத்தில் அனைவரது மனத்தையும் தொட்டன.

மொரப்பூர், அ. நவ்சாத்.




* டாஷ்கெண்ட் மாநாடு: ''அச்சா ஹிஹோ கயா.''

# டாஷ்கெண்ட் மாநாடு

(7)

'இந்தியா — பாகிஸ்தான் ஒத்துழைப்பை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும்' என்ற கருத்தை வற்புறுத்திய தமது 'சுயராஜ்யா' கட்டுரையின் அச்சுப் பிரதியை, அந்த இதழ் வெளியாகு முன்னரே — முன்கூட்டியே — லால்பகதூர் சாஸ்திரிக்கு அனுப்பி வைத்திருந்தார் ஸி. ஆர். இந்தக் கட்டுரைதான் வாதப்பிரதிவாதத்துக்குத் தமிழ் நாட்டில் உள்ளாகியது! சுயராஜ்யா மீது வழக்குத் தொடுத்த தமிழக அரசு இந்தக் கட்டுரையைத்தான் சான்று காட்டியிருந்தது! இந்தக் கட்டுரையைப் படித்து விட்டு லால்பகதூர் சாஸ்திரி பின்வருமாறு ராஜாஜிக்குக் கடிதம் எழுதினார்:

''நீங்கள் கூறியிருப்பது எங்களுடைய ஆழ்ந்த கவனத்துக்கு உரியது. அதிலும் கடைசி பாரா மிகவும் முக்கியமானது.'' (15.10.65)

இந்தக் கடைசி பாராவின் ஒரு பகுதி சென்ற இதழில் இடம் பெற்றுள்ளது. அதனை மீண்டும் நினைவு கூர்வது எனில்:

''விஞ்ஞானத்தில் கூட முடிவான உண்மைகள் என்று கருதப்பட்டவை பின்னால் மேலும் பல ஆராய்ச்சிகள் நடந்ததன் விளைவாக மாறுதல்களுக்கு உள்ளாகியுள்ளன. அவ்வாறிருக்க அரசியல் வாழ்வின் நீர்த்துப் போன உண்மைகளைச் சாசுவதமெனப் பிடிவாதமாகக் கருத வேண்டாம்.''

இந்த பாராவை முடிக்கும் போது ஸி. ஆர். கூறினார்: ''குறுகிய பார்வை வேண்டாம்; தொலை நோக்கு தேவை.''

இதற்குப் பின் சிறிது காலத்துக்குள் சோவியத் பிரதமர் கோஸிஜினிடமிருந்து சாஸ்திரிக்கு ஓர் அழைப்பு வந்தது. இந்தியா பாகிஸ்தான் உச்சகட்ட மாநாட்டைத் தமது முந்நிலையில் டாஷ்கெண்டில் நடத்துமாறு அந்த அழைப்பு கோரியது. இதே போன்ற ஓர் அழைப்பு அயூப்கானுக்கும் சென்றது. இந்தியாவைக் குறித்து சீனாவின் உள்நோக்கங்களை முறியடிக்க வேண்டும் என்பது ருஷ்யாவின் இந்த எதிர்பாராத அழைப்புக்குப் பகுதிக் காரணமாக இருந்ததென்பதை மறுக்க முடியாது. பிரதமர் சாஸ்திரி இந்த அழைப்பை ஏற்றார்; அயூப்கானும் அவ்வாறே செய்தார். பீகிங் கோபத்துடன் கைகளைப் பிசைந்து கொண்டது.

தனிப்பட்ட முறையிலும் பகிரங்கமாகவும் ஸி. ஆர். தமது ஆசிகளை லால்பகதூருக்கு அளித்தார். பிரதமர் புறப்படுவதற்குச் சற்று முன்பாக அவருக்குக் கிடைக்குமாறு ராஜாஜி எழுதிய கடிதத்தில், ''உங்களுடைய மாபெரும் முயற்சியில் நீங்கள் வெற்றி பெற

எனது இதயபூர்வமான நல்லெண்ணங் களைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று எழுதியிருந்தார். ''நீங்கள் எதிர்பார்ப்பதற் கும் அதிகமாக நல்லனவே விளையும் என்று எனக்குத் தோன்றுகிறது.'' (16.12.65)

ஆசி வழங்கியது மட்டுமல்ல. சுயராஜ்யா கட்டுரையில் விரிவான ஆலோசனைகளை யும் வெளியிட்டிருந்தார் ஸி. ஆர். வாய்ப்புக் கிடைத்தால் இந்தியாவின் பிரதிநிதியாக டாஷ்கெண்ட்டுக்குத் தாமே போகத் தயாராக இருந்தது போல் அத்தனை தெளி வான அறிவுரைகள்!

''பேச்சு வார்த்தைகளிலிருந்து காஷ்மீர் பிரச்னையை ஒதுக்கி விட நேருமானால் (ஒதுக்கி விடத்தான் நேர்ந்தது) அதைவிடப் பெரிய ஒரு விஷயத்தை சாஸ்திரி மாநாட்டில் சமர்ப்பிக்க வேண்டும்'' என்று ஸி. ஆர். சொன்னார். ''அதாவது இரு நாடுகளி டையே ஏற்றுமதி இறக்குமதி வரி, சுங்க வரி இல்லாத வியாபாரம் தழைக்க வகை செய்து, இரு நாடுகளும் தொழில் மற்றும் பொருளாதார வளர்ச்சியில் ஒன்றோ டொன்று ஒத்துழைக்க வேண்டும்.

''காஷ்மீர் பிரச்னையை மாநாட்டில் விவாதிக்காமல் ஒத்திப் போட ருஷ்யா உதவ லாம். எப்படியெனில், 'அது ஓர் அரசியல் பிரச்னை மட்டுமல்ல, பாதுகாப்புப் பிரச் னையும் கூட; எனவே சீனாவும் பங்கேற்கக் கூடிய எதிர்கால மாநாடு ஒன்றில் அது பற்றி விவாதித்து முடிவெடுக்கலாம்' என்று ருஷ்யா சுட்டிக் காட்ட வேண்டும்.''

ஜனவரி 4ம் தேதி உச்சகட்ட மாநாடு ஆரம்பமாகியது. ஜனவரி 9—ஆம் தேதியன்று பேச்சு வார்த்தைகள் முறிந்துவிடும் என்றே தோன்றியது. அப்போது கோஸிஜின் தலையிட்டு எப்படியாவது மாநாட்டைத் தோல்வியடையாமல் காப்பாற்றி விட வேண்டும் என்று போராடினார். காற்று திசை திரும்பியது. மூன்று வார யுத்தத்தில் பாகிஸ்தானும் இந்தியாவும் இழந்திருந்த அல்லது வென்றிருந்த பகுதிகளை ஒரு வருக்கு ஒருவர் திருப்பித் தந்து விடுவது பற்றிய வேதனையான பிரச்னைக்குச் சுமுக மான முடிவு ஏற்பட்டது. பிரச்னைகளுக்குத் தீர்வு காண யுத்தத்தை ஒரு மார்க்கமாக இனி கருதுவதில்லை என்ற ஒப்பந்தம் ஏற்பட்டது. காஷ்மீர் பற்றிய விவாதம் எதிர்காலத்துக்கு ஒத்திப் போடப்பட்டபோதிலும் டாஷ் கெண்ட் மாநாட்டின் சாதனை கணிச மானதே.

ஒப்பந்தத்தில் அயூப்கானுடன் சேர்ந்து கையெழுத்திட்ட பிறகு, ''அச்சா ஹி ஹோ கயா'' என்றார் லால்பகதூர் சாஸ்திரி. ''நல்லனவே நடந்தன.'' இதன் பிறகு சில கடிதங்களை 'டிக்டேட்' செய்தார். அவற் றுள் ஒன்று ராஜாஜிக்கு. டாஷ்கெண்ட் பேச்சு வார்த்தைகளையொட்டி ஸி. ஆர். எழுதிய அறிவுரைகளும் ஊக்கமளிக்கும் வாசகங்களும் அடங்கிய கடைசி கட்டுரை மாநாடு ஆரம்பமாகும் சமயம் சாஸ்திரிக்குக் கிடைத்திருந்தது. ''உங்கள் கட்டுரையை நான் பார்த்தேன். டாஷ்கெண்ட்டில் நாங் கள் செய்திருக்கும் காரியம் உங்கள் ஆமோதிப்பைப் பெறும் என்றும் முழுமை யான ஆதரவைப் பெறும் என்றும் உறுதி யாகக் கருதுகிறேன். நீங்கள் நலமாக இருக் கிறீர்கள் என்று நம்புகிறேன்.''

இந்தக் கடிதத்தில் லால்பகதூர் கையெழுத் துப் போட முடியாமல் விதி சதி செய்து விட்டது! கடிதத்தை 'டிக்டேட்' செய்து விட்டுச் சிறிது நேரத்தில் அவர் உறங்கப் போனார். அதிகாலை மூன்று மணிக்கு மாரடைப்பால் காலமானார்!

திகைத்துப் போன ஸி. ஆர்., ''இந்தச் சோகமான செய்தியின் பயங்கரத்தை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை'' என்றார். பின்னர் தொடர்ந்து சொன்னார்: ''இந்த விபரீதமான பேரிழப்பையும் தேசம் தாங்கிக் கொண்டு முன்னேறும். டாஷ்கெண்ட்டில் கொடுக்கப்பட்டுள்ள உறுதிமொழிகளுக்குக் காலம் சென்ற பிரதமரின் ஆன்மா புனித முத்திரை பதித்திருக்கிறது.''

காலம் சென்ற பிரதமரின் காரியதரிசி எல்.கே.ஜா, சாஸ்திரியின் கையெழுத்திடாத கடிதத்தைச் சில நாட்கள் சென்று ராஜா ஜிக்கு அனுப்பி வைத்தார்.

காமராஜரும் மற்ற காங்கிரஸ் தலைவர் களும், லால்பகதூர் சாஸ்திரியை அடுத்துப் பிரதமர் பதவியை ஏற்க ஒரு நபரைத் தேடி, கண்களைச் சுழல விட்டார்கள். அவர்கள் பார்வை இந்திரா காந்தி மீது நிலைத்தது.

(தொடரும்)



"நாம் பாடுபட்டு உழைத்து பணத்தை சேர்த்திருக்கோம். வட்டி சிறிது குறைவாக கிடைத்தாலும் சரி, நமது முதலீடு பாதுகாப்பாக இருக்க வேண்டும்."

"உங்களுக்கு வட்டியும் கூடுதலாக கிடைத்து, முதலீடும் பாதுகாப்பாக இருந்தால்?"

# தனஸ்ரீ

## குறைந்த பட்சம் 12% பங்கு இலாபம்.

## அத்துடன் முதலீட்டின் பாதுகாப்பு மற்றும் யூனிட்களை ரொக்கமாக்கும் வசதி*.

தனஸ்ரீ எல்.ஐ.சி. ம்யூச்சுவல் ஃபண்ட் துவங்கியுள்ள ஒரு புதிய முதலீட்டு திட்டம்.

தனஸ்ரீ யூனிட்களில் 10 ரூபாய் சமமதிப்பில் முதலீடு செய்யுங்கள். செப்டம்பர், 1989-ல் இவற்றின் விலை ரூ 9.90 மட்டுமே. உங்களுக்குக் குறைந்தபட்சம் 12% பங்கு இலாபம் கிடைக்கும். அத்துடன் உங்கள் முதலீடு வளர்ச்சியுறும், வருவாயும் அதிகரிக்கும்.

தனஸ்ரீ யூனிட்கள் முற்றிலும் பாதுகாப்பானவை. *நவம்பர் 1, 1990-க்குப் பின் அவற்றை எல்.ஐ.சி.யின் அங்கீகரிக்கப்பட்ட எந்த கிளையிலும் ரொக்கமாக மாற்ற முடியும்.



*குறைந்தபட்சம் ரூ. 1000-த்திலிருந்து தொடங்கி நீங்கள் எவ்வளவு அதிகத்தொகை வேண்டுமானாலும் முதலீடு செய்ய முடியும். உங்களுக்கு வருமான வரி மற்றும் சொத்து வரியில் சலுகைகளும் அளிக்கப்படும்.

முதலீடு செய்வதற்கு இதர சில திட்டங்கள்:

**தனரட்சா**— தொடரும் முதலீடு திட்டம். இதில் ஆயுள்காப்பு மற்றும் விபத்து இன்ஷ்யூரன்ஸ் ஆதாயமும் கிடைக்கும்.

**தனவிருத்தி**— முதலீட்டு வளர்ச்சியின் நிரந்தர முதலீடு திட்டம். இதில் குறைந்தபட்சம் 12% வருவாய் நிச்சயமாக கிடைக்கும். இத்திட்டத்தில் ஆயுள்காப்பு நிதி அதிகமாக கிடைப்பதுடன் விபத்து இன்ஷ்யூரன்ஸின் ஆதாயமும் கிடைக்கும்.

மேலும் விவரங்களுக்கு எல்.ஐ.சி.யின் அங்கீகரிக்கப்பட்ட எந்த கிளையிலும் தொடர்பு கொள்ளவும். முதலீட்டுத் தொகைகள், **சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியாவின் அங்கீகரிக்கப்பட்ட கிளைகளில்** மட்டுமே செலுத்தப்பட வேண்டும்.

எல்.ஐ.சி. ம்யூச்சுவல் ஃபண்ட் அக்கவுண்டிங் ஆண்டு அக்டோபர் 1 முதல் செப்டம்பர் 30 வரையாகும். இக்காலவரையறைப்படியே பங்கு இலாபங்கள் அளிக்கப்படும்.



**எல்.ஐ.சி. ம்யூச்சுவல் ஃபண்ட்**

**உங்கள் நோக்கம் நிறைவேற நாங்கள் உதவுவோம்**

**முந்துங்கள்! செப்டம்பர் 30, 1989-க்கு முன்பாக வாங்கும் தனஸ்ரீ யூனிட்களில் 1% தள்ளுபடி உண்டு. நீங்கள் வாங்கும் விலை ரூ. 9.90 மட்டுமே!**

R K SWAMY/LMF/4415/T 84

# முதல் சினிமா

**நீங்கள் பார்த்த முதல் சினிமா என்ன? அந்த அனுபவத்தை நினைவுபடுத்திச் சொல்லுங்கள் எனச் சிலரைக் கேட்டபோது கிடைத்த வித்தியாசமான 'மலரும் நினைவுகள்':—**



* சுந்தரராஜன்

**சுந்தரராஜன் (வயது 76):** நான் பார்த்த முதல் சினிமா ஹரிதாஸ்தான். மவுண்ட்ரோடில் ஒரு தியேட்டரில் என் அப்பா, அம்மா, மற்றும் நிறைய உறவினர்களுடன் பார்த்தேன். கதை, டயலாக் ஒன்றும் புரியாத வயது. வெள்ளைக் குதிரையில் ஒருவர் வருவார். அந்தக் காட்சியும், படம் பார்க்கும் போது, தின்பதற்காக என் அம்மா கொடுத்த முறுக்கும், அப்பா கொடுத்த மிட்டாயும்தான் நினைவுக்கு வருகிறது. அப்புறம் ஹரிதாஸ் படத்தை இரண்டு தடவை பார்த்து விட்டேன். டி.வி.யில் பார்த்த போது கூட படத்தை மிகவும் ரசித்தேன்.

**நடராஜன் (60):** சினிமா என்றால் ஏதோ கடைத் தெரு போல ஒரு இடம்



* நடராஜன்

என நினைத்துக் கொண்டே சினிமா தியேட்டருக்குப் போனதால், தியேட்டர் கட்டடம்தான் சினிமாவாக்கும் என முடிவு செய்து விட்டேன். உள்ளே அழைத்துக் கொண்டு போனால் வரிசையாய் இருக்கைகள்! எதிரே வெள்ளைத் திரையில் படம் ஓடியதை ஆச்சரியமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்த முதல் சினிமா என்ன தெரியுமா? மாயாபஜார்! 'கல்யாண சமையல் சாதம்' பாட்டு அப்போதும் மிகவும் பாபுலர். அந்தப் பாட்டை பாடியபடி ஒரு குண்டான ராட்சசன் சாப்பிட்ட காட்சிதான் என்னை மிகவும் கவர்ந்தது.



* சக்குபாய்

**சக்குபாய் (40):** நான் பார்த்த முதல் சினிமா பார்த்திபன் கனவு. பெற்றோருடன்தான் சினிமாவுக்குப் போனேன். ''சின்ன பசங்கள் சினிமாவெல்லாம் பார்க்கக் கூடாது'' என்று அப்பா சொன்ன போது ஒரே பிடிவாதம்தான். காரணம் என் சிநேகிதி ஒருத்தி, என்னிடம் சினிமா பார்த்து விட்டு வந்ததாய் மிகவும் பெருமையடித்துக் கொண்டதுதான். அதுதான் எப்படியும் சினிமா பார்க்க வேண்டும் என்கிற வெறியை என்னுள்ளே கிளப்பி விட்டது. சினிமா பார்த்தேனேயொழிய, ஒண்ணுமே புரியவில்லை: மறுநாள் 'நானும் சினிமா பார்த்தேனே!' என்று சொல்லி என் சந்தோஷத்தை வெளிப்படுத்திக்

கொண்டேன். பல வருடங்களுக்குப் பின் அதே படத்தை மறுபடியும் பார்த்த போது, என்னால் படத்தை மிகவும் ரசிக்க முடிந்தது.





* பத்மா

**பத்மா ராஜேந்திரன் (25):** நினைவில் நிற்கிற சினிமா என்று கேட்டால் நான் மேட்டூரில் பார்த்த தெய்வ மகன் படத்தைத்தான் சொல்லுவேன். அதற்கு முன்னால் ஒருசில சினிமாக்கள் பார்த்திருந்தாலும், அவற்றின் பெயர்களோ, கதையோ, காட்சிகளோ எனக்கு நினைவில் இல்லை. இந்தப் படத்தில் சிவாஜி மூன்று வேடத்தில் தோன்றிய போது எனக்கு ஒன்றும் புரியவில்லை. முகத்தில் தழும்பு கொண்ட சிவாஜியைப் பார்த்து முதலில் பயந்து போய் அலறியது எனக்கு நன்றாய் நினைவில் இருக்கிறது. சமீபத்தில் விடியோவில் தெய்வமகன் பார்த்த போது, ஒவ்வொரு ஃப்ரேமையும் ரசித்தேன்.

**ஸ்ரீராம் (22):** நான் பார்த்த முதல் சினிமா கந்தன் கருணைதான். எங்கள் வீட்டில் சாமி படம் என்றால்தான் என்னை





* ஸ்ரீராம்

அப்போது சினிமாவுக்குக் கூட்டிக் கொண்டு போவார்கள். முருகன், பிள்ளையாரை எல்லாம் கோவில்களில் கல்லிலும், விக்ரகத்திலும் பார்த்துப் பழகிய எனக்கு, திரையில் மனிதர்கள் போல, சுவாமிகள் எல்லாம் நடந்து வருவதையும், பேசுவதையும் பார்த்த போது, பிரமிப்பு தாங்க முடியவில்லை. படம் பார்த்து விட்டு, வீட்டுக்குத் திரும்பிய போது பக்கத்து வீட்டுக்காரர், ''என்னடா! சினிமா பார்த்தியா? என்ற போது, ''இல்லை... இல்லை... சாமி எல்லாம் பார்த்தேன்'' என்றேன். அது நன்றாய் ஞாபகம் இருக்கிறது!





* நாராயணன்

**நாராயணன் (15):** வீரபாண்டிய கட்டபொம்மன்! இதுதான் நான் பார்த்த முதல் சினிமா. படம் பார்த்து விட்டு வந்த பின், என் அப்பா, ''சினிமா எப்படி இருந்தது?'' என்று கேட்டார். ''வேஷ்டியைக் கட்டி, நீளமா லைட் போட்டாங்க. வேஷ்டியில் படம் தெரிந்தது'' என்றேன். எல்லோரும் சிரித்தார்கள். ஏன் சிரித்தார்கள் என அப்போது எனக்குப் புரியவில்லை. இப்போது புரிகிறது!

பேட்டி: **மௌஷ்மி**

படங்கள்: **ரமணன்**
ஸ்டில்ஸ் உதவி:
**ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்**

# என் உயிர்த் தோழனே

## அத்தியாயம் 23

### நள்ளிரவில் திருமணம்!

**உ**ன்னாண்ட ஒரு பெரிய 'ஹெல்ப்' (help) கேக்கத்தான் வந்துக்கறேன்கா'' என்றான் தருமன் மல்லிகாவிடம். ''அத்தை எப்படி உன்னாண்ட கேக்கறதுன்னுதான் தெரில்ல...''

சிட்டுவின் உறுதியான முடிவைக் கேட்டுவிட்டு அம்பாக மல்லிகாவைத் தேடி வந்திருந்தான். அவள் அவனை உரிமையோடு அதட்டினாள்:

''தே... இன்னா! இன்னாவோ எங்களை இன்னிக்குத்தான் மொத தபா பாக்கற மாதிரியும் கேக்கறதுக்கு கஸ்டப்படறா மாதிரியும் மூஞ்சிய வெச்சுக்கினுகீறியே...! இன்னா விஷயம்?''

''அட, இது வேற ஒண்ணும் இல்ல யக்கா... இந்தச் சிட்டு பொண்ணில்லே — அதான் நாட்டுபொறத்துல இருந்து இங்க வந்து மாட்டிக்கிச்சே — அத்த நான் சேப்டியா (safety) இருக்கணுமேனிட்டு அய்யரு ஊட்டுக்கு இட்டுக்கினு போய் உட்டுட்டு வந்தேன் இல்லே... அது இப்ப பொட்டி படுக்கையெல்லாம் மூட்டை கட்டிக்கினு நேரா நம்ம குடிசையில் வந்து குந்திக்கினுகீது. இனிமே நான் இங்கியே தங்கிக்கிறேன்னு சொல்லிட்டு வந்துட்டேன்னுது. இந்த எடம் சுத்த பத்தமெல்லாம் நீ நெனைக்கிற மாதிரி இருக்காது உனக்குத் தோது பட்டு வராதுன்னு சொல்லிப் பாத்தேன். ஆனா அது எத்தையும் கேட்கிற மாதிரியில்லே. அப்படியிருக்கச் சொல்ல தொரத்தறதுக்கு எனக்கும் மனசு பேஜாராகீது... அதே பாவம் அம்மா இல்லாத பொண்ணு! இந்த லட்சணத்துல உசிரோட இருக்கச் சொல்லவே அவங்கப்பங்காரன் அத்தத் தலை முழுகிட்டான்... அதுவும் கிட்டத்தட்ட அனாதை மாதிரிதான். யாருமே நமக்கு இல்லைன்னு நெனைக்கச் சொல்ல ஆம்பிளையாப் பொறந்த எனுக்கே மனசு எப்படி கஸ்டப்படுது தெரியுமாக்கா. அத்துலே இது பாவம் பொண்ணு — அத்த வெரட்ட எனக்குக் கஸ்டமாகீது யக்கா.''

— பேசி முடிக்கும் தறுவாயில் தருமன் அழுதிருந்தான்.

''தே இப்ப அதுக்குப் போய் இன்னாத்துக்கு அவ்வுறே கண்ணைத் தொடை!''

''எனக்குச் சட்னு யக்காவோட நெனப்பு வந்துடுச்சி...''

தருமனை ஒருவாறு சமாதானப்படுத்திக் கேட்டாள் மல்லிகா. ''நீ சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லு தருமா...''

''அத்தான் சொன்னேனே. இப்ப அந்தப் பொண்ணு நம்ப குடிசையிலதான் கீது. அத்தால நீ அதுக்குக் கொஞ்சம் கூட மாடத்தாசையா இருக்கணும். அப்பாலே இன்னொரு பெரிய விசயம். இன்னான்னா அந்தப் பொண்ணு ஊட்டுலே இருக்கச் சொல்ல நைட்லே நான் ஊட்டுக்கு வர்றது அவ்ளோ சரிக்டா எனக்குப் படலே. அத்தாலே டெய்லி நைட்லே நீதான் யக்கா அதுக்குத் தொணையா நம்ம குடிசையிலே போய்ப் படுத்துக்கணும். இத்த மட்டும் நீ செஞ்சேன்னா — நான் சாவச் சொல்லக் கூட உன்னை மறக்காம நெனவு வெச்சிருப்பேன் யக்கா.''



''தே இன்னாத்துக்குச் சொம்மா பெரிய

பெரிய வார்த்தையெல்லாம் பேசற இப்ப நீ? நான் நைட்லே அந்தப் பொண்ணு கூட தொணையா இருக்கறும் — அவ்னோ தானே? இத்த நீ கூப்பிட்டு 'யக்கா, ஊட்டாண்ட போய்ப் படுத்துக்கன்னுட்டு ஒரு வார்த்தைல சொன்னா செய்யப் போறேன். கவலைய வுட்டுட்டுக் குடிசையாண்ட போ. சொல்றேன்...'' சொன்னவளையே சிறிது நேரம் பார்த்திருந்துவிட்டு அங்கிருந்து கிளம்பினான் தருமன்.



அன்றைய இரவிலிருந்தே மல்லிகா சிட்டுவுக்குத் துணையாகத் தருமனின் குடிசையில் படுத்துக் கொள்ள, தருமன் குயில் குப்பத்தை ஒட்டியிருந்த அவனது நண்பன் 'பட்டு' சேகரின் சைக்கிள் கடையைத் தனது இரவு நேரக் குடியிருப்பாக மாற்றிக் கொண்டான்.

சிட்டு ஆரம்பத்தில் கஷ்டப்பட்டாலும் வெகு விரைவில் தன்னை அந்தச் சூழலுக்குப் பழக்கப்படுத்திக் கொண்டாள். அவளை வாட்டிக் கொண்டிருந்ததெல்லாம் தன்னால் தருமனுக்கு அனாவசியமாக ஏதாவது கஷ்டமோ என்ற ஒரே எண்ணம்தான். தனது அன்றாட வாழ்க்கையை எந்தவிதச் சங்கடமுமில்லாமல் செவ்வனே நடத்தியதன் மூலம் தருமன் சிட்டுவின் அந்தச் சந்தேகத்துக்கும் முற்றுப்புள்ளி வைத்தான்.

அனைத்தும் எந்தவிதத் தடையுமின்றிச் சீராகவே சென்று கொண்டிருந்தது — சிட்டு மீண்டும் தருமனின் குடிசைக்கே குடிவந்து விட்டாள் என்ற செய்தி டில்லியின் காதுக்கு எட்டும் வரை. விஷயம் அறிந்த டில்லி மீண்டும் முருங்கை மரம் ஏறினான்.

குயில் குப்பத்தினர் அனைவரும் கூடியிருக்க ஆளாளுக்கு ஏதோ கசமுசத்துக் கொண்டிருந்தனர். இன்னதுக்காகத்தான் கூடியிருக்கிறோம் என்று தெளிவாக எவருக்குமே தெரியாத நிலை. டில்லி தாராளமாக ஊற்றிய சாராயத்தை இறக்கிக் கொண்டு, அவன் வீசிய பிரியாணிப் பொட்டலத்தால் வயிறை நிரப்பிக் கொண்ட ஒருவன், கூட்டத்தைக் கூட்டி, கத்திக் கொண்டிருந்தான். குப்பத்தினுள் அமைந்திருந்த கட்சி அலுவலகத்தின் முன் கூடியிருந்த கும்பலிலிருந்தே ஏதோ குழப்பம் என்று யூகித்த 'பங்கி முருகேசு' அவசரமாய் அங்கு ஆஜராகிக் கேட்டான்:

''யோவ்! இப்ப இன்னா பிரச்னைன்னு இங்க எல்லாம் கூடிக்கினுகிறீங்க?'' டில்லியின் எச்சிலை உண்டவன் தருமனை எதிர்க்க ஆரம்பித்தான்.

''அப்படி கேளு! இது நாயம். நல்லா கேளு பங்கி — இந்தக் குப்பத்துக்குத் தலைவன் யாரு?''

''டேய்! இது இன்னாடா உனக்கு இத்தினி வருசம் கழிச்சுப் புதுசா இதுல டவுட்?''

''தே... கேக்கற கேழ்விக்குப் பதில் சொல்லு...''

''ஏன் நம்ப தருமன்தான்!''

''கரைக்டு... தலைவன்றவன் யாரு... இம்... நாலு பேருக்கு நல்லது செய்யறவன் — இன்னா...? நாலு பேரு பார்த்துப் பெருமையா இவருதான் என் தலைவருன்னு சொல்ற லெவலுக்குக் கவுரதையா இருக்க வேண்டியவன் இல்லையா? அப்படிப்பட்டவனா இருக்கச் சொல்லத்தான் நாம்ப தருமனை நம்ப குப்பத்துக்குத் தலைவனாத் தேர்ந்தெடுத்தோம். அது மாத்திரமில்லாம, அவன் இன்னா சொன்னாலும் இன்னி வரைக்கும் அத்த அப்படியே தப்பாம செஞ்சுகினும் வர்றோம் தேர்தல்லே கூட நம்ப மொத்த வோட்டும் இன்னும் பக்கத்து ஜனம் வோட்டும் கூட, தருமன் சொல்ற ஒரே கார



"மாப்பிள்ளையோட ஒண்ணுவிட்ட அக்காவால் பெண் பார்க்க வர முடியலை!"

"அதனாலென்ன?"

"நாங்க கிளம்பும் போது அவளுக்குக் கொஞ்சம் டிபன் பார்சல் கட்டிக் குடுத்துடுங்க!"

— ஞா. ஞானமுத்து.

ணத்துக்காக அவன் கட்சிக்கே போட்டுக்கினு வர்றோம்... அப்படி இருக்கச் சொல்ல நாம்ப தலைவன்னு சொல்லிக்கிறவன் செய்யற காரியத்தால இப்ப நம்ப குப்பத்து பேரு மட்டுமில்லாம நம்ம கட்சியோட பேரும் சேர்ந்து நாறுது. இப்படிப்பட்ட ஒருத்தனை இன்னும் நாம தலைவனா வெச்சிருக்கலாமா? இதுதான் என் பாயிண்டு."

பொங்கி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு பங்கி விசாரித்தான், "தே... சொம்மா பெனாத்திக்கினே போவாத... இப்ப இன்னா பெரிய தப்புப் பண்ணிட்டான் தருமன். அத்தால அப்படியே நம்ப குப்பத்து மானமும் கட்சி மருவாதியும் கெட்டுருச்சின்னு கெடந்து குதிக்கறே நீ...?"

"அவன் இன்னம் இன்னா செய்யணும்? இப்ப அவன் செய்யறதே எட்டூருக்கு நாறுது... கண்ணாலம் ஆவாத ஒரு வயசுப் பொண்ணைத் தள்ளிக்கினு வந்து, இங்க கௌரதையா குடும்பம் நடத்திகினுகிற நமக்கு மத்தியிலே எந்தக் கவலையும் படாம ஜல்சா பண்றானே! இந்தக் குப்பத்துல எவன் கண்ணுக்கும் இது தப்பாத் தெரியலையா? ஒரு தலைவனே இப்படி இருக்கறப்போ அவன் எப்படி நம்பளைத் தட்டிக் கேக்க முடியுங்கற தில்லுல நாளைக்கி நாலு பேருக்கு நாலு தப்புக் காரியம் செய்யத் தோணும். தருமனும் அந்த கண்டுங் காணாம போவ வேண்டி வரும்... அத்தால தான் நான் சொல்றேன் தலைவனை மாத்தணும்."

பொங்கியெழுந்தான் பங்கி முருகேசு:

"பொறுக்கி நாயே, இன்னா பேச்சுடா பேசினே? தருமனைப் பத்திப் பேச உனக்கு இன்னாடா யோக்கியதைகீது... இன்னா சொன்னே தருமன் அந்தப் பொண்ணைத் தள்ளிக்கினு வந்து ஜல்சா பண்றான்னா? நான் நெனைச்சா நீ பேசினதுக்கு இப்பவே உன்னை நார் நாராக் கீசி போட்ருவேன், ஆனா உன் மேல கை வைக்கிறதுக்குக் கூட எனக்கு அசிங்கமாகீது... இன்னம் சொல்றேன் கேட்டுக்க — என்னிக்கி அந்தப் பொண்ணு தருமன் குடிசைக்குத் திரும்புச்சோ அன்னிக்குலேந்தே தருமன் நைட்லே படுக்கறதுக்குக் குப்பத்துக்கு வர்றதையே வுட்டுட்டான். அது மாத்திரமில்லே. அவன் காலைல குளிக்கறது, நாஸ்டா பண்றது எல்லாம் கூட வெளிலதான். டேய்! இத்தெல்லாம் உன் கைலே சொல்லணுங்கற அவசியம் எனக்கில்லேடா! இருந்தாலும் ஏன் சொல்றேன்னா, இன்னிக்கு நீ கேட்டுட்ட... நாளைக்கி வேற ஒரு எச்சிக்கலை, எவனாச்சும் ஊத்தி உட்டான்னு ஊத்திக்கினு இங்க வந்து எத்தாச்சும் பிரச்னை பண்ணான்னு வை, அப்பால அவன் உசிரோட ஊடு போக மாட்டான்! நீ இங்க கூவுனதைக் கேட்க இப்படிக் கூட்டம் கூடியிருக்கறது நம்ப குப்பத்துப் பொம்மனாட்டிங்களுக்குத் தெரியாது; தெரிஞ்சதுன்னு வை...

பங்கி இந்த வார்த்தையை உச்சரிக்கும் போதே, குப்பத்து மாதர் குல மாணிக்கங்களுக்கு விஷயம் எட்டியிருக்க,

கையில் துடைப்பக் கட்டைகளோடும், செருப்புக்களோடும் கும்பலில் அமர்ந்திருந்த அவரவர் கணவன்மார்கள் மீதும் பிள்ளைகள் மீதும் பாய்ந்து, நையப் புடைத்து, "தருமனையே பேசற அளவுக்கு ஆயிட்டீங்களா நாயிங்களா!" என்றவாறே தத்தம் குடிசைகளுக்குத் தள்ளிச் சென்றனர்.

கும்பல் கலைந்து சென்றாலும் அதில் ஒருவன் கிளப்பிய பிரச்னை சவாரிக்குச் சென்றிருந்த தருமனையும் குடிசையிலேயே இருந்த சிட்டுவையும் எட்ட வெகு நாழியாகவில்லை. கஷ்டத்தை அதன் பல்வேறு ரூபங்களில் அடுக்கடுக்காய் அடுத்தடுத்துச் சந்திக்க நேர்ந்ததால் சிட்டு அதிகப் பக்குவப் பட்டிருந்தாள். அவள் வருந்தியதெல்லாம் தன்னால் தருமனுக்கு ஏற்பட்ட அவமானம் அவனை எந்த அளவு பாதிக்குமோ என்றுதான்.

சிட்டு பயந்தது சரியாகப் போயிற்று. தன் குப்பத்திலேயே வசிக்கும் ஒருவன் தன்னைப் பற்றி அவதூறாய்ப் பேசுவது என்பது தருமனுக்கு முற்றிலும் புதிதான ஒன்று. அவனது செய்கையால் அவன் குப்பத்திற்கும் அவன் சார்ந்திருந்த கட்சிக்கும் அவப்பெயர் ஏற்பட்டிருப்பது உண்மையாயின், அவன் தன்னை மாய்த்துக் கொள்ளவும் தயாராயிருந்தான். எந்த ஒரு கலக்கமான நிலையிலும் தன் நிலை தடுமாறாதவன், பிறந்த இருபத்தாறு வருடங்களில் முதன் முதல் சாராயத்தைக் கையால் தொட்டான். அனைத்து ஜீவராசிகளும் தன் கண்ணுக்குப் புழுவாகத் தெரியும் அளவுக்குக் குடித்தான். பின் ஏதோ அரற்றியவாறே தன் ரிக்ஷாவில் சரிந்தான்.

விஷயம் அறிந்த பங்கி, தருமனை வாய்க்கு வந்தபடி திட்டியபடி குப்பத்துக்கு அழைத்து வந்தான். குப்பத்திற்குள் நுழைந்ததும் நேரே சிட்டுவிடம் சென்று நிலைமையை விளக்கினான் பங்கி.



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542 – இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அநுசரித்து சுமார், முறையே ரூ. 250/- அல்லது 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2500/- அல்லது 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D – 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் – 612 001.**

****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு****



தான் செய்த தவறை எடுத்துச் சொல்வதற்காக மகிழ வேண்டிய அரசாட்சி, சொன்னவர் மீது எப்போது பாய்கிறதோ, அப்போதே அதன் அஸ்திவாரம் பலவீனமாகி விட்டது என்று அர்த்தம்.

— அரேலியஸ்.

தகவல்: புத்தனாம்பட்டி சி. மணி.

''தருமன் படிக்காதவம்மே. ஆனாக்க மருவாதையானவன், மனுஷாள் மேலே பாசமா கீறவன். நான் அவன் பொறந்ததில இருந்து கூட இருக்கறவம்மே. அவன் வாழ்க்கையிலே குடிச்சி நான் பாக்கறது இப்பத்தான். நீ படிச்ச பொண்ணு! அவனுக்கு நீதாம்மே கொஞ்சம் நல்லதும் கெட்டதும் எடுத்துச் சொல்லணும். அவனுக்குன்னு இருந்த யக்காவும் இப்ப இல்லே. கொஞ்சம் பார்த்துக்கம்மே.''

சொல்லி முடித்துச் சென்று விட்டான் பங்கி.

சிட்டு மெல்ல தலைநிமிர்த்தித் தருமனைப் பார்த்தாள். தருமன் கயிற்றுக் கட்டிலில் தலை குப்புறப்படுத்து, அசைவின்றிக் கிடந்தான். நீண்ட நேரம் யோசித்து ஒரு தீர்க்கமான, மாற்ற முடியாத முடிவுக்கு வந்தாள் சிட்டு.

ஒரு கை சில்லென்று தன் மீது பட, சாராயத்தின் வீர்யம் குறைந்திருந்த அந்தக் கணத்தில் விசுக்கென்று எழுந்த தருமன், தன் முன் சிட்டுவைப் பார்த்துத் தலைகுனிந்தான். தன் செயலுக்காக வெட்கப்பட்டான். அவளை நிமிர்ந்து பார்க்கவே கூசினான். ஒருவாறு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நிமிர்ந்தவனின் கண் முன், சிட்டு கையில் ஏந்தியிருந்த மஞ்சள் பூசப்பட்ட தாலிக் கயிறு!

''இன்னாமே இது?''

''தாலி!''

''அது தெரிது.. இத்த இன்னாத்துக்கு இப்ப எனக்குக் காட்டிக்கினுகிறே?''

சிட்டு தெளிவாகவும் உறுதியாகவும் சொன்னாள், ''இதை என் கழுத்துல கட்டுய்யா.''

தருமனால் அதற்கு மேலும் பொறுக்க முடியவில்லை. கதறி விட்டான். ''இதோ பாரும்மே நான் பெத்தவ பேரு கூடத் தெரியாதவன், படிக்காதவன், முரடன், முட்டாள். இன்னும் புரியற மாதிரி சொல்லணும்னா, நான் இங்க ஓடுதே கூவம், அத்த மாதிரி. ஆனா நீ அப்படியில்லம்மே. நீ கங்கை மாதிரி...''

— தருமன் மேலும் பேசுமுன் சிட்டு அவனைத் தடுத்தாள்.

''உங்களால உங்க குப்பத்துக்கும் நீங்க இருக்கற கட்சிக்கும் எந்தவித கெட்ட பேரும் வரக் கூடாதுன்னு நீங்க நெனைக்கிறது உண்மைதானே?''

'ஆம்' என்பதற்கு அடையாளமாகத் தருமன் தலையாட்டினான்.

''அப்படி ஒரு கெட்ட பேரைத் தடுக்கணும்னு உண்மையிலேயே நெனைச்சா, இதை என் கழுத்துல கட்டுங்க!''

''இத்த கட்டிட்டா?'' அப்பாவித்தனமாய்க் கேட்டான் தருமன்.

''இதை என் கழுத்துல கட்டிட்டீங்கன்னா நீங்க உசிரா நெனைக்கிற இந்தக் குப்பமும் உங்க கட்சியும் உங்களைத் தப்பாப் பேசாது.''

''அப்படிங்கறே.''

''ஆமா அப்படித்தான். இந்தாங்க!''

அர்த்த ராத்திரி என்றும் பாராமல், அக்காவின் படத்தின் முன்னே நின்றபடி, தருமன் சிட்டுவின் கையிலிருந்த கயிற்றை வாங்கி அதை அவளது கழுத்தில் ஏற்றி மூன்று முடிச்சிட்டான். அடுத்த நிமிடம் தருமன் புதுத் தெம்பு பெற்றவனாய்த் தலை நிமிர்ந்து குடிசைக்கு வெளியே சென்று போட்ட வெறிக் கூச்சலில் குப்பமே அவன் குடிசைமுன் கூடியிருந்தது.

''டேய் இன்னாவோ நான் தள்ளிக்கினு வந்து வெச்சிக்கிறேன் அப்படி இப்படினீங்களாமே இப்ப பேசுங்கடா பாக்கலாம்...! நெஞ்சிலே தில்லிருந்தா பேசுங்கடா. அஆம் இப்ப அது என் பொண்டாட்டி, நான் தாலி கட்டுன பொண்டாட்டிடா!'' என்றவன் ''இந்தாம்மே சிட்டு வெளியிலே வா,'' என அழைத்தான். சிட்டு வெளியே வர, குப்பம் முழுவதும் அவளது கழுத்தையே குறி வைத்துப் பார்க்க, அங்கே புத்தம் புதிய மஞ்சள் கயிற்றுடன் கூடிய சிறு மஞ்சள் துண்டு, குப்பத்தினரைப் பார்த்து அடக்கமாய்ப் புன்னகை செய்தது.

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

ல்லிகை நறுமணத்தில்
ளித்தெழுங்கள்”

பவர் ராமாயணம் புகழ் தீபிகா.

இந்தியாவின் மிக நவீன மயமாக்கப்பட்ட தொழிற்சாலையிலிருந்து, இத்தாலியின் தொழிற் நுட்பத்துடன், மல்லிகை நகரத்திலிருந்து இந்த சோப் தயார் செய்யப்படுகிறது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தும் தரமான சோப்புகளை தயாரிப்பதில் சரித்திரம் படைத்தவர்கள் இதையே பின் தொடர்கிறார்கள்.

**மல்லிகையின் நறுமணத்தில்**
**குளித்தெழுங்கள்.**

மைசூர் ஜாஸ்மின்




ர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட்ஸ்
லிமிடெட் பெங்களூர்-560 055.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka






